உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.

சிறப்பாசிரியர்,

பேராசிரியர்

திரு. அ. ச. ஞானசம்பந்தன், M. A., சென்னை-83

ஆசிரியர் குழு:-

திரு. கம்பன் அடிப்பொடி, காரைக்குடி

திரு. மு. அருணாசலம், M. A., திருச்சிற்றம்பலம்

திரு. கா. ம. வேங்கடராமையா, M. A., அண்ணாமலைநகர்

மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர், மதுரை

மகாவித்துவான்

திரு. சி. அருணைவடிவேல் முதலியார், அண்ணாமலைநகர்

திரு. க. வச்சிரவேல் முதலியார், B. A., L. T., மதுரை

புலவர் திரு. கீரன், லால்குடி

டாக்டர் திரு. டி. பி. சித்தலிங்கையா, M. A. Ph.D., மதுரை

திரு. கு. சுந்தரமூர்த்தி, M. A., திருப்பனந்தாள்

திரு. பொ. முத்தரசு M. A., ஸ்ரீவைகுண்டம்

நிர்வாக ஆசிரியர்:-

டாக்டர் ம. வே. பசுபதி, D. Litt., திருப்பனந்தாள்

அட்டையில்:

ஸ்ரீ அருணந்தி சிவாச்சாரியார் திருவுருவம்

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 3] புரட்டாசி [பகுதி 12

## ஊக்கம் தாருங்கள்

ஸ்ரீ குமரகுருபரர் திங்கள் இதழ் தொடங்கி இந்த இதழுடன் மூன்ருண்டுகள் நிறைவுறுகின்றன. 'பல அரிய செய்திகளைத் தாங்கி வருகிறது' என்றும், 'தரமான இதழாக இருக்கிறது' என்றும் இதைப்பலரும் பாராட்டுகிருர்கள் அது மகிழ்ச்சியைத் தருகிறது. 'நிகழ்வுச் செய்திகளுக்கு இடம் தராத இதழ் ஆகையினுல் தொகுத்து வைத்துக் கொள்ளத் தகுந்த இதழ்' என்றும் தக்கவர்கள் சொல்லும்போது இன்பமாக இருக்கிறது. என்ருலும் பெரும்பாலான ஆத்திக இதழ்களுக்கு உள்ள ஓர் இடர்ப்பாடு இந்த இதழுக்கும் உள்ளது. சந்தாக்கள் குறைவாக இருப்பதுதான் அது. தாள் விலை ஏற்றம், கட்டுப்பாட்டுக் காகிதம் உரியபடி கிடைக்காமை, அச்சு நிர்வாகச் செலவுகளின் உயர்வு இன்ன பிற தொல்லைகள்இருந்தாலும் சந்தாத் தொகையை உயர்த்தவில்லை. அதற்கு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் அனுமதி கிடைக்காது.

வாசக அன்பர்களை நான் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன், சந்தாக்களைப் புதுப்பித்துக் கொள்ளுங்கள். உங்கள் நண்பர்களையும், உறவினர்களையும் சந்தாக்கள் அனுப்பச் செய்யுங்கள்; ஆயுட் சந்தாக்களைத் தவணை முறையிலும் அனுப்பலாம்.

சமய, இலக்கியக் கட்டுரைகள் எழுதுங்கள். அவை தரமானவை என்று உங்கள் மனம் வியக்கும் பட்சத்தில் இந்த இதழுக்கு அனுப்புங்கள். ''தெரிந்தவர்கள் எதையெழுதினுலும் வெளியிடுவது; தெரியாதவர்கள் எவ்வளவு உயர்வாக எழுதினுலும் வெளியிடுவதில்லை'' என்ற ''பத்ரிகாதர்மம்'' இங்கு இல்லை.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய பண்டார மும்மணிக் கோவை என்னும் அரிய இலக்கியத்தின் பதினுன்காவதுசெய்யுள் 'பந்தனை தவிராச் சிந்தனை' என்று தொடங்குவது. கடந்த இரண்டு இதழ்களிலுமாக அச்செய்யுளின் 17 அடிகளுக்கு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் விளக்கம் அருளியுள்ளார்கள். அடுத்த எட்டடிகட்கு இந்த இதழில் விளக்கம் அருளியுள்ளார்கள். ஸ்ரீ குமரகுருபரர் யமகம் பாடுவதிலும் மிக வல்லவர். யமகம் என்ருலென்ன? இந்தப் பாடற்பகுதியில் உள்ள யமகத்தின் சுவையென்ன? என்றெல்லாம் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் விளக்கியருளியுள்ளார்;

அறிஞர் திரு. மு. அருணுசலம் அவர்கள் 'பஞ்சாயதன பூஜை' என்னும் அரிய சிறப்புக் கட்டுரை ஒன்றனை இந்த இதழுக்கென நல்கியுள்ளார்கள்.

அடியார்கள் வாழ்வில் இறைவன் செய்தவற்றைச் சோதனைகள் என்பது பொருந்துமா? புலவர். திருத் முருகு. சுவாமிநாதனைக் கேட்போமே?

சென்ற இதழ்த் தொடர்ச்சிகளும், பேராசிரியர் திரு. கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., அவர்கள் வழங்கும் நெஞ்சுவிடு தூது தெளிவுரை, திரு. கல்யாணசுந்தர தேசிகர் எழுதும் பண்ணுராய்ச்சி, திரு. கா. ம. வே. அவர்கள் எழுதும் சிதம்பர செய்யுட் கோவையின் ஆங்கில மொழி பெயர்ப்பு, திரு. வன்மீகநாதன் அவர்கள் நல்கும் லவட்ஸுவின் அறவுரைகளின் தமிழாக்கம், திருவிளையாடற் புராண உரைநடை ஆகிய தொடர்களும் இதழுக்கு அணி செய்கின்றன.

நி. ஆ—ர்



# ஆலய பூஜைப் படிக்காசு நிதிக்கு

## நன்கொடையளித்த அன்பர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| | 3—8—81 வரை கூடுதல் ரூ. | 12,678-00 |
| 1. | துர்க்கா குடில் திரு. அப்பு அய்யர் அவர்கள் | 5-00 |
| 2. | சிலோன் திரு. மு. சிவராசா அவர்கள் | 101-00 |
| 3. | பனசை திரு. T. M. V. அவர்கள் | 5-00 |
| 4. | திருச்செங்கோடு திரு. அ. மாரிமுத்து அவர்கள் | 20-00 |
| 5. | நெல்லை திரு. T. V. சங்கர குமாரு அவர்கள் | 5-00 |
| 6. | சென்னை திரு. S. R. வெங்கட்ராமன் அவர்கள் | 10-00 |
| 7. | மதுரை திரு. அருணாசல முதலியார் அவர்கள் | 8-00 |
| 8. | துர்க்கா குடில் திரு. அப்பு அய்யர் அவர்கள் | 5-00 |
| 9. | ஊத்துக்கோட்டை S. சந்திரா அவர்கள் | 5-00 |
| | 4—9—81 வரை கூடுதல் ரூ. | 12,842-00 |

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணியவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி
முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

கடவுளை, உலகைப் புரக்கிறான் என்று சொல்லலாம். அரசனையும் அப்படிச் சொல்வார்கள். புரப்பது - காப்பது. குருதேவராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள்,

தண்பணை உடுத்த தமிழ்ப்பெரும் கூடல்
வண்பதி புரக்கும் மாசி லாமணி

என்று விளிக்கிறார்கள். பணை என்பது மருதநிலம்; நன்செய்நிலம். மதுரை நன்செய் நிலங்களையே உடையாக அணிந்திருக்கிறதாம். அது தமிழ்க் கூடல், பெரும் கூடல், வண்பதியும் கூட. வண்பதி என்றால் வளப்பம் உடைய பதியும், வள்ளல்தன்மை உடைய பதியும் என்று பொருள். சொக்கலிங்கமே ஸ்ரீ மாசிலா மணியாக அவதரித்தமையால் கடவுளுக்குச் சொல்லும் 'புரக்கும்' என்ற சொல்லை இவருக்கும் அமைத்தார்.

சமஸ்கிருத பாஷையில் 'யமகம்' என்று ஓர் அலங்காரம் உண்டு. தமிழில் அந்த அலங்காரத்தை 'மடக்கு' என்று சொல்வார்கள்.

எழுத்தின் கூட்டம் இடைபிறி தின்றியும்
பெயர்த்தும்வேறு பொருள்தரின் மடக்கெனும்
பெயர்த்தே

என்று தண்டியலங்காரம் அதன் இலக்கணம் பேசும். ஒருமுறை வந்து இருபொருள் தருவது சிலேடை. இரு முறை மடங்கிவந்து வேறுபொருள் தருவது மடக்கு.

நான்கு மடக்குகளை ஸ்ரீ சுவாமிகள் இப்பாடலின் அடுத்த பகுதியில் வைக்கிறார்கள்.

சிவபெருமான் கலைகளை உடைய மதியைத் தலையிலே சூடியுள்ளான். அவனே மாசிலாமணியாக வந்த போது தலையில் அந்த மதியைத் தாங்காமல் தலைமையாகிய அறி வெனப்படும் சாஸ்திர ஞானம் வெளிப்பட வந்தான்.

தலைப்படு கலைமதி தாங்காது ஆங்குஅத்
தலைப்படு கலைமதி தாங்கி

[1. தலைப்படு கலைமதி - தலையில் உள்ள, கலைகளை உடைய பிறை; 2. தலைப்படு கலைமதி – உயர்ந்த சாஸ்திர அறிவு.]

சிவபெருமான், மான் ஆகிய உமையம்மையை இடப் பக்கம் வைத்துள்ளான். அவனே ஸ்ரீ மாசிலாமணியாக வந்தபோது, மானிடன் ஆகிய வடிவு கொண்டான்.

நிலைப்படு

மான்இட னுய வடிவுகொண் டருளாது
மானிட னுய வடிவுகொண்டு அருளி

[மான் - உமையம்மை; இடன் - இடப்பக்கம்; மானி டன் – மனிதன்.]

சிவபெருமான் எலும்புகளை அணியாகப் பூண்டுள்ளான் அவனே ஸ்ரீ மாசிலாமணியாக வந்த போது என் பணிகளை ஏற்றுக் கொண்டான்.

எற்பணி பூணுது எற்பணி பூண்டு

[1. எற்பு + அணி - ஏற்பு - எலும்பு; 2. என் + பணி எற்பணி]

பூதகணங்கள் சூழ இருப்பவன் சிவன். அவனே ஸ்ரீ மாசிலாமணியாக வந்த போது பூமிக்கு வந்தான்.

பாரிடம் சூழாது பாரிடம் சூழ்தர

[1. பாரிடம் - பூதம்; 2. பார் + இடம் - பாரிடம்; உலகம்]

இப்படி நான்கு மடக்கு அலங்காரம் வைத்து'அவனே சிவன்; சிவனே அவன்' என்பதை நிறுவுகிறார் நம் சுவாமிகள்.

— சிவ சிவ

*************************

உ

சிவ சிவ

# தருமசாசனம்

அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

## முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்கள் அண்மையில் நிறுவியருளிய அறக்கட்டளைகளின் விவரங்கள்

**எண் 66: வாரணாசியில் ஸ்ரீகேதாரேஸ்வரர் வைகாசி பூரட்டாதி அபிஷேக நிதி:**

மூலதனம் ரூ 1,000/. இதன் வட்டித்தொகையைக் கொண்டு பொய்யாக்குடி திரு. மகாலிங்கம் பிள்ளையின் குமாரன் ம. கல்யாண சுந்தரம் பேரில் வைகாசி பூரட்டாதியன்று ஸ்ரீகேதாரேஸ்வரருக்கு விசேஷ அபிஷேக ஆராதனை நிகழ்த்தப்பெறும்.

**எண் 67: வாரணாசியில் ஸ்ரீ கேதாரேஸ்வரர் கார்த்திகை மாதம் அபிஷேக நிதி:**

முதற்பொருள் ரூ 1,000/. வாரணாசி திரு. சி. எஸ். வைத்யநாத ஐயர் நினைவாக மேற்படி நாளில் ஸ்ரீகேதாரேஸ்வரருக்கு விசேஷ அபிஷேக ஆராதனை நிகழ்த்தப்பெறும்.

உ

சிவ சிவ

## ஸ்ரீ காசிமடத்தின் புதிய வெளியீடுகள் :-

# விற்பனைக் கழிவில்

# ஒரு மாற்றம், சிறு மாற்றம்

ஸ்ரீ காசிமடம் வெளியீடுகள் வாங்குவோர் இனி ஒவ்வொன்றிலும் 20 பிரதிகட்குக் குறையாமல் வாங்குவோரே 20% விற்பனைக் கழிவு பெற இயலும்.

ஸ்ரீ காசிமடம் பதிப்புக்கள் மலிவுவிலைப் பதிப்புக்கள். எனவே விற்பனையாளர்களுக்குமட்டிலும் 20% கழிவு தர இயலும். விற்பனையாளர்களிடம் நூல்பெறுவோர் அவர்களிடம் தொகைச் சலுகை கேட்டால் தாம் பெறும் 20 விழுக்காடு தொகையில் அவர்களால் எவ்வாறு கழிவு தர இயலும்? எனவே இச்சிறு மாற்றம் செய்யப் பெற்றுள்ளது.

அங்கீகரிக்கப் பெற்ற விற்பனையாளர்களுக்கு அண்மையில் அறிவிக்கப்பெற்றுள்ள பிற சலுகைகள் தொடர்ந்து நீடிக்கும்.

திருவாசகம் மூலம் விற்பனைக்குக் கிடைக்கும்.

பெரிய புராணம் (உரைநடை) வரும் விஜயதசமியன்று வெளியீடாக உள்ளது.

பெரிய புராணம் (மூலம்), நெஞ்சு விடு தூது ஆகிய நூல்கள் அச்சாகிக் கொண்டுள்ளன.



# விநாயகர் அகவல்

(இலவச வெளியீடு)

இதன் பிரதி வேண்டுவோர் 25 காசுகள் தபால் தலை அனுப்பிப் பெற்றுக் கொள்ளவும். முகவரி G. S, முத்துசாமி, ஸ்ரீ சண்முகம் பிரஸ், நரசிங்கன்பேட்டை. 609 802.

## 42. வன்முறையாளன்

தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்.

டௌவிலிருந்து ஏகம் பிறக்கிறது;
ஏகத்திலிருந்து இரண்டு பிறக்கிறது;
இரண்டிலிருந்து மூன்று பிறக்கிறது;
மூன்றிலிருந்து சிருஷ்டிக்கப்பட்ட உலகம்.
சிருஷ்டிக்கப்பட்ட உலகம் யின்[1]னைத் தன் முதுகின்மீதும்,
யாங்[2]கைத் தன் முற்புறத்திலும் சுமந்து செல்கிறது;
இவ்வண்ணம் வழங்கும் மூலக்கோட்பாடுகளின் ஐக்கியத்
தால் உலகம் ஒன்றோடொன்று இணங்கி நல்லுறவுடன்
வாழ்வதை எய்துகிறது.

அனாதையாக்கபடுவது தன்னந்தனியாகத் தனிமையிலிருந்து,
தகுதியற்றவனாக இருப்பது, இவற்றைத்தான் மனிதர்கள்
மிகவும் வெறுக்கிறார்கள்.

ஆயினும் அரசர்களும் பிரபுக்களும் தம்மை அப்
பெயர்களால் சொல்லிக்கொள்கிறார்கள்.
ஏனெனில் சில சமயங்களில் சில பொருள்கள் அவற்றிலிருந்து
ஏதாவதை எடுத்துவிடுவதால், ஏதாவது
அபகரிக்கப் படுவதால் நன்மையை அடைகின்றன,
ஏதாவது சேர்க்கப்படுவதால் துன்புறுகின்றன, கேடுறுகின்றன.

மற்றவர்களும் இந்த நீதிநெறியைப் போதித்திருக்கிறார்கள்,
அதையே நானும் கற்பிப்பேன்:
''வன்முறையாளன் வன்முறையான சாவைத்தான் எய்துவான்''
இதை நான் என் ஆன்மீகத்துறை ஆசிரியனாக்கருதுவேன்.

---

குறிப்பு: — 1,2 'யின்' - ஈர்க்கும் துருவமுனை, 'யாங்' – எதிர்த்துத் தள்ளும் துருவமுனை. எடுத்துக்காட்டாகக் கூறப்படுகிறது—ஒரு மனிதன் மிகவும் மகிழ்வுறும் போது அவன் 'யாங்' கால் ஈர்க்கப்பட்டு அதை நெருங்குகிறான், அவனே மிகவும் கோபமுற்றிருக்கும்போது 'யின்'னால் ஈர்க்கப்பட்டு அதை நெருங்குகிறான். 'யாங்' கை விருப்பு, 'யின்'னை வெறுப்பு என்று கூறினால் பொருந்தும்.

## 43. மிகவும் மிருதுவான பொருள்.

உலகத்திலுள்ள அதி மிருதுவான பொருள்
அதிகடினமான பொருளின் ஊடே செல்கிறது[1]
உருவற்ற பொருள் இடைவெளி, அல்லது விரிசல் இல்லாத பொருளை ஊடுருவுகிறது.
இதிலிருந்து முனைந்து யாதொரு செயற்படா மலிருப்பதின் அநுகூலத்தை அறிகின்றேன்.[2]
சொல்லின் உதவியின்றிப் போதிப்பதும்[3]
முனைந்து யாதொருவகையிலும் செயற்படாமலிருப்பதின் அநுகூலமும்
உலகில் ஒப்புயர்வுஇல்லாதன வாகும்.

---

1. சல்லிவேர் பாறையைத் தகர்ப்பதுபோல.

2. தத்தமக்குரிய இடைஞ்சல்களை விளைவிக்கும் மேலெழுந்தவாரியான செயல்களுக்கு மாருக ஆன்மீக ஆற்றலின் எங்கும் விரிந்துரவும் செல்வாக்கு எல்லா இடங்களுக்கும் சென்றடைகின்றது.

3. தக்ஷிணாமூர்த்தியின் முறை.



உ
சிவமயம்

****************************

# சிதம்பர செய்யுட் கோவை

****************************

A String of Verses on Chidambaram
By Kumaragurupara Swamigal
Translated into English by K. M. Venkataramiah

3\. மெய்த்துயரம் உயிர்க்குஎய்தும் விளையாட்டும் உலகு ஈன்ற
அத்திருவுக்கு இலைஅதுவும் அவர்பொருட்டே ஆம் அன்றே.

The true grief the soul meets with;
(- It is the birth it takes);
It is one of your sports;
This that Lady, the procreator of the Universe, does not do;
Even this is for the delilverance of the souls.

4\. இன்னருளே மன்உயிர்கட்கு எத்தொழிலும்; ஈன்றெடுத்த
அன்னைமுனி வதும்தனயர்க்கு அருள்புரிதற்கே அன்றோ.

For the bestowal of grace on the souls eternal
All functions He performs;
The mother that begets children frowns;
Is it not for the bestowal of grace?

5\. எவ்வுருவும் நின்உருவும் அவள்உருவும் என்றன்றே
அவ்வுருவும் பெண்உருவும் ஆண்உருவும் ஆயவே.

All forms are but Your form and Her form;
Is it not so?
Hence all the forms have become feminine and masculine.

6: நின் அலாது அவள்இல்லை அவள்அலா நீ இல்லை
என்னில் நீ யேஅவனும் அவளுமாய் இருத்தியால்;

She is not without you;
without Her you exist not
If said so,
You alone pervade as He and She.

அதனால் - Therefore

தந்தை நீ - The Father you are
தாயும் நீ - The Mother too you are
தமரும் நீ - The kindred too you are
பிறரும் நீ - The others too you are
சிந்தை நீ - The mind you are
உணர்வு நீ - The instinct you are
சீவன் நீ - The soul you are
யாவும் நீ - The whole you are

என ஆங்கு - so

- சுரிதகம் -

நெஞ்சகம் குழைந்து நெக்குநெக்கு உருகநின்
குஞ்சித சரணம் அஞ்சலித்து இறைஞ்சுதும்
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையில்
செம்மாந் திருப்பது தீர்ந்து
மெய்ம்மையில் பொலிந்த வீடு பெறற் பொருட்டே

The heart breaking into pieces and melting,
Your upraised bent foot,
We adore with hands folded
This body is but a dirty cottage;
Filled it is with the three impurities§;
To be freed from being in it with pride,
And to attain bliss glowing in truth

§ Aanava, Maaya and Kanma

செல்லார் பொழில் தில்லைச் சிற்றம்பலத்து எங்கள்
பொல்லா மணியைப் புகழ்மினோ வம்மின் புலவீர்சாள்!

Thillai is surrounded by groves clouds;
crawling
There in the Hall of Wisdom,
Adore our spotless Gem!
Please do come, Oh Literati!

முத்தேவர் தேவை முகில்ஊர்தி முன்னை
புத்தேளிர் போலப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்!

The Lord of the Trinity,
Like the celestials with Indra,
the rider of clouds, to lead them,
Please adore!
Please do come, Oh Literati!

ஆங்கற் பகக்கன்று அளித்தருளும் தில்லைவனப்
பூங்கற் பகத்தைப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்!

He begot Kalpaka Vinayaka;
He is the Kalpaka - the celestial tree in the Thillai
grove;
Please adore!
Please do come, Oh Literati!

# (சோ)சாதனை

புலவர். முருகு, சுவாமிநாதன் பி. லிட், (எம்.ஏ)

உலகில் இன்ப துன்பங்கள் மாறிமாறி வருகின்றன. மனிதன் இன்பத்தை அனுபவிக்கும்போது எல்லையில்லா மகிழ்ச்சி அடைகின்றான். உலகத்தையே இன்பமயமானதாகக் கருதுகின்றான்; இன்பமன்றி வேறு எதுவுமே சிறந்ததன்று என்று நினைக்கின்றான். சுற்றுபுற மக்களை நிகழ்ச்சிகளை மறந்து 'தன்னையே மறந்த வயந் தன்னில்' வாழ்கின்றான். இறைவனைக் கூட மறந்து விடுகின்றான். இன்பம் என்று அவன் கருதுகின்ற– விரும்புகின்ற– அனுபவிக்கின்ற - பெறுகின்ற அந் நிகழ்ச்சி மாறி மாறுபட்ட நிகழ்ச்சி வருகையில், அவன் எதிர்நோக்குகையில் அதற்கு வருந்துகின்றான். உலகப் பொருள்களைத் துன்ப வடிவானதாகக் கருதுகின்றான். தான் துயரம் அனுபவிப்பதை உலகினர் அனைவரும் அனுபவிக்க வேண்டும் என்று விழைகின்றான். துன்பம் இறைவனால் தான் வருகின்றது என்று கருதி 'ஆண்டவா! என்னைச் சோதிக்காதே அப்பா! என்று பலவாறு உளறுகின்றான். சிலர் 'எனக்கு இவ்வளவு துன்பம் அடுக்கடுக்காக வருகின்றதே! நீ பார்த்துக் கொண்டு தானே இருக்கிறாய்! நீ தெய்வமா? அல்லது கல்லா?' என்று வெகுண்டு தீச்சொல் மொழியவும் தலைப்படுகின்றனர். இவ்வாறு வருந்துகையில் 'சோதனை செய்கின்றான்' என்று கூறுவதைச் சற்று சிந்தித்தால் உண்மையை உணர ஏதுவாகும். சோதனை என்பது தெரிந்த பொருளின் தெரியாத தன்மையைத் தெரிந்து கொள்ள எடுக்கும் முயற்சியாகும். அல்லது தெரிந்த பொருளின் கேட்ட தன்மையைக் கண்ணுரக் கண்டு உணரச் செய்யும் முயற்சியாகும். இறைவன் முற்றும் உணர்ந்த பரம் பொருள்; அவன் உணர்த்த உணர்பவன் அல்லன்; தான் எல்லாப் பொருளுமாகிய இருந்து அவற்றின் வேறாகவும் இருப்பவன். எனவே இறைவன் தன்னால் படைக்கப்பட்ட தன்னிடமிருந்து அறிவு, விழைவு, செயல்களைப் பெற்ற உயிர்களின் அனைத்து உணர்வுகளையும், பேச்சுகளையும், செயல்களையும் (Al thought, word and deeds) முற்ற உணர்ந்தவன்; அவன் அவற்றைச் சோதனை செய்து தான் அறிந்து கொள்ள வேண்டும் என்ற நியதியில்லை; ஒரு மனிதனில் செயல்களை நல்ல, தீய, உயர்ந்த

இழிந்த செயல்களை, அண்டை அயலில் உள்ளாரும் பிறரும் அறியாமல் போகலாம்; அறிந்தும் சீர்தூக்காமல் ஒதுக்கலாம். ஆனால் இறைவன் உயிர்களின் எல்லாவிதமான செயல்களையும் நன்குணர்ந்து இருப்பதோடு அவனுடைய விருப்பப்படிதான் உயிர்கள் ஆட்டுவிக்கப்பட்டு செயல்களைப் புரிகின்றன, அதே நேரத்தில் உயிர்கள் செய்யும் நன்மை தீமைகளைப் பிறர்க்கு - உலகினர்க்கு-அறிவிக்கவும் அவர்கள் அதனை அறிந்து - அவற்றிலுள்ள இன்பதுன்பங்களைச் சீர்தூக்கி நல்லவனவற்றைக் கைக்கொண்டு, அல்லனவற்றை விலக்க வேண்டும் என்பதற்காகவும், நல்லன புரிந்த அருளாளர்கள் புகழ் மேன்மேலும் ஓங்க வேண்டும்; அவர்கள் தங்கள் நற்பணியைத் தொடரவேண்டும்- அவர்களின் நன்னெறியைப் பிறரும் உணர்ந்து மேற்கொள்ள வேண்டும் என்பதற்காகவும், இறைவன் நன்னெறியில் ஒழுகும் அடியவர் முற்றிலும் பரிபூரணமாகமுதிர்ச்சி பெற்று விட்டனர் என்பதை உலகுக்கு அறிவிக்க வேண்டியும் அவர்கள் நெறியில் வாழ்க்கையில் - சில தடைகளை இடையூறுகளைத் திருவிளையாடலால் ஏற்படுத்துவான். தொண்டர் அவ்விடையூறுகளைக் கடந்து தேர்ச்சியடைவதைப் பார்த்து அவர்களின் திருத்தொண்டின் உறைப்பையும் உண்மை அன்பினையும், செய்திரங்காவினைத் திட்பத்தையும் உலகவர் உணர்வர். இதனை அறியாத சாதாரணமக்கள் 'சோதனை செய்கின்றான்! சோதிக்கின்றாயே' என்று கூறுவர். ஆனால் இலக்கிய கர்த்தாக்களும், சமயச்சான்றோரும், உண்மையை உணர்ந்து இவையனைத்தும் இறைவனின் விளையாட்டுக்களே, இவற்றின் பயன் தொண்டர்களின் பெருமையைத் துலங்கச் செய்வதே, உலகினர் உணரச்செய்வதே - ஆகும் என்று தெளிவாக உரைப்பர். அவை திருத்தொண்டர்களின் சாதனையே அன்றி அவர்களை அறிந்து கொள்ள இறைவன் செய்யும் சோதனையன்று என்றும் உரைப்பர்.

பெரியபுராணத்துள், திருநீலகண்டரும் அவர்தம் துணைவியாரும் தங்களுக்குள் உடன் உறைவு இல்லாதிருந்த காலத்து அவர்களுடைய திருத்தொண்டின் உறைப்பினை உலகவர்க்குக்காட்ட இறைவன் சிவனடியார் வேடங் கொண்டு எழுந்த நளுகின்றதைத் தெய்விகக் கவிஞரும்,

> இந்நெறி ஒழுகும் நாளில்
> எரிதளிர்த் தென்னநீண்ட
> மின்னொளிர் சடையோன் தானும்
> தொண்டரை விளக்கங் காண

என்பர்.

இதனையொப்ப, அமர்நீதியார் புராணத்தும், வெண்கிழிக்

கோவணம் கொண்டு வந்து தந்து அதன்மூலம் அவரின் தொண்டு நெறியை எல்லோரும் அறியும் வண்ணம் செய்ய இறைவனின் மாணியாய்த் தோன்றியதாகக் குறிப்பிடுவார் சேக்கிழார்.

> 'தொண்டர் அன்பெனும்
> தூநெறி வெளிப்படுப்பாராய்'

எனும் அடி மேற்கூறியதை நிறுவும்.

இவ்வாறு இறைவன் தொண்டரின் விழுமிய பணியை உலகவர்க்கு அறிவிக்கும் வகையில் திருவிளையாடல்கள் புரிவதை விளக்கிய சேக்கிழார் இறைவன் திருவாக்கினாலேயே இம்மெய்ம்மையை நிலைநாட்டுகின்றார்.

சிவகாமியாண்டார் இறைவன் பூசைக்காகக் கொய்து வந்த திருப்பள்ளித் தாமங்களைப் பட்டத்து யானை கவிழ்க்க, எறிபத்தர் வெகுண்டு யானையைக் கொல்ல, காவலர் உரைக்கக் கடிது வந்த வேந்தனும் கனன்று நோக்கி, பின் விவரமறிந்து தன்னையே அழித்து கொள்ள முயல, அடியாரும் தன் சீற்றத்துக்கு வருந்தித் தன்னை மாய்த்துக் கொள்ள முனைய இந் நிலையில் இறைவன் அருளால்- இறைவன் திருவாக்கால் வானொலியால் – உண்மைநிலையை - அடியவரின் திருத்தொண்டின் மேன்மையைப் பாருளார் அறியவே இவ்விளையாடலைப் புரிந்தநிலை – உணரப்படுகிறது. இதனைச் சேக்கிழார்,

> ......... கண்ணுதல் அருளால்
> வாக்குக்
> கிளரொளி விசும்பின் மேல்வந்
> தெழுந்தது பலருங் கேட்ப''
> "தொழுந்தகை அன்பின் மிக்கீர்
> தொண்டினை மண்மேல் காட்டச்
> செழுந்திரு மலரை இன்று
> சினக்கரி சிந்தத் திங்கட்
> கொழுந்தணி வேணிக் கூத்தர்
> அருளினால் கூடிற்றன் றங்கு.

என்று மொழிவர்.

மேற்கூறிய மூன்றிடத்தும் 'விளக்கங்காண', 'வெளிப்படுப் பாராய்' 'மண்மேல் காட்ட' எனப் பிறவினையில் அமைந்துள்ளமை இவ்வாய்வுத்தலைப்பின் பொருளை அரண் செய்வதாக உள்ளது.



# சீகாமரம்

திருமுறைக் கலாநிதி இசைநம்பி
S. கல்யாணசுந்தர தேசிதர்.
ஸ்ரீ காசிமடம் திருமுறைப்பணி, கும்பகோணம்.

இந்த சீகாமரம் என்ற பண் 15- வது மேளமாகிய மாயா மாளவ கெளள என்ற இராகத்தின் ஜென்னியமாக அமைந்துள்ளது. இதன் ஆரோகண சஞ்சாரம்— ஸரிகமபத என்றும், அவரோகண சஞ்சாம் பரிகரிஸ என்றும் சஞ்சாரகிரமம் உள்ளதாக அமைந்திருக்கிறது. இதனை மார்க்கம் என்று சொல்வது வழக்கம். மார்க்கம் என்றால் பழமையான இராகம் என்று பொருள். இதன் சஞ்சாரம் சுத்தரிஷப அந்தரகாந்தார சுத்த மத்திம சுத்ததைவத காகலிநிஷாதம் என்ற இராக சஞ்சாரம் அமைந்துள்ளது. இந்த சீகாமரம் என்ற பண் சஞ்சாரத்தில் ஆரோகணத்தில் சட்சம சஞ்சார முதல் தைவத சஞ்சாரம் வரை அவரோகணத்தில் பஞ்சம சஞ்சார முதல் சட்சம சஞ்சாரம் வரை முடிகிறது. இந்த சஞ்சாரக் கிரமம் தெரிவதற்குத் திருமுறை ஆசிரியர்களான சம்பந்தர், அப்பர், சுந்தரர் இம் மூவரும் பாடிய சீகாமரம் என்ற பண்ணை இசைத்துப் பார்ப்பின் இராக சஞ்சாரத்தின் உண்மை புலப்படும். சம்பந்தர் பாடியுள்ள தேவாரச், சீகாமரம் என்ற பண்ணில் உள்ள குன்றவார் சிலை நாணராவரிவாளி கூரெரி காற்றின் மும்மதில் (கமாகாரிஸா, ஸஸஸஸரீ காமாகாரீஸ காமா பாததபா) வென்ற வாறங்கனே விடையேறும் வேதியனே (கமா மா மாபாதா பதாபாமா மக கரீஸ) என்று பாடுவது பழமையான முறையில் அமைந்துள்ளது. இந்தப் பாடல் காந்தாரத்தில் தொடங்கியும் தைவதத்தில் கார்வையுடனும் பஞ்சம சட்சமத்தில் முடிகிறது. இத்தனை சிறப்புள்ள சீகாமரம் என்ற பண்ணை, நாத நாமகிரியை என்ற இராகத்தில் பாடுவதென்று சொல்கிறார்கள். இந்தப்பண் மிகப் பழமையானது. இதனைத் தேவாரத்தில் தான் காண்கிறோம். ஆலயங்களில் நடைபெறும் திருவிழாவில் வருண சந்தியில் (மேற்கு) உபசாரம் வரும் போது ஆகம சாத்திரத்தில் சீகாமரப் பண் அருளிப்

பாடுக என்று செல்வதுதான் வழக்கம். இந்தத் தமிழ் இசைப் பண்ணுகிய சிகாமரம் என்ற இசையைஆராயுமிடத்துப்பழமை யான இராகம் சிகாமரம் தான் இதன் சஞ்சாரத்தை ஆராய்ந் தால் 15வது மேளமாகிய மாயா மாளவ கௌள என்ற இராகத் தின்ஜென்னியமான பூர்ண பஞ்சம ராகமாகிறது. ஆரோகண அவரோ கண கிரம சஞ்சாரம் மேலே தெரிவித்து மிருக்கிறது.

இந்த ராக சாயலில் மூவர் பாடிய தேவாரத்தில் பண் இந்த ளம் என்ற இராகமிருக்கிறது. பழமையான தமிழ்இசைப்பெயர்-இந்தளமாகயிருப்பின் பாடிவரும் முறை 15வது மேளமாகிய மாயா மாளவ கௌள என்ற இராக சாயலில் வருகிறது. இதன் ஆவரோகண, அவரோகண சஞ் சாரம் பின் வருமாறு,

ஆரோகணம் ; ஸமகமபதநீ

அவரோகணம் : ஸ்நீதபமகரீஸ.

# ஸ்ரீ அருணந்தி சிவாச்சாரியார்

## திரு. ம. வெள்ளைவாரணம்.

ஸ்ரீ அருணந்தி சிவாச்சாரியார் திருத்துறையூரில் ஆதி சைவ மரபில் பிறந்தவர். வடமொழி வேதங்களையும் செந்தமிழ்த் திருமுறைகளையும் நன்கு கற்றவர். இருபத் தெட்டு ஆகமங்களையும் தெள்ளத் தெளியக் கற்றுச் சகலாகம பண்டிதர் என்ற பட்டம் பெற்றவர். அச்சுதகளப் பாளரின் குல குருவாக விளங்கியவர். மெய்கண்டாரின் தோற்றத்துக் காரணமாகத் திருவெண்காட்டு முக்குளத்தில் நீராடுமாறு அச்சுத களப்பாளரைப் பணித்தவரும் இவரே. மெய்கண்டாரிடம் தீட்சை பெற்றுச் சந்தானசாரியார் பரம்பரையில் இரண்டாமவராக விளங்கியவர். மெய்கண்டாரிடம் சிவஞான போத நூலைக் கேட்டுத் தெளிந்து அந் நூலுக்கு வழி நூலாகச் சிவஞான சித்தியார் என்ற நூலை இயற்றியவர். மற்றும் இருபா இருபஃது என்ற சாத்திர நூலையும் செய்தவர். தமது மாணாக்கருள் சிறந்தவரான மறைஞான சம்பந்தர்க்குத் தீட்சையளித்து சந்தான பரம்பரைக்கு உரியவராக்கினவர். இவரது காலம் 13-ம் நூற்றாண்டு.

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்.

### தோல் வியாதிகட்கு

(அ) தினசரி துளசியைக் காலை வேளையில் பல் துலக்கியதும் ஒரு பிடி சாப்பிட்டு வர, தோல் சம்பந்தமான வியாதிகள் குணமாகும்.

### முகத்தில் விழும் கரும்புள்ளிக்கு

(ஆ) முகத்தில் விழும் கரும்புள்ளிகட்கு இரவு எலுமிச்சம் பழச் சாற்றை நன்கு முகத்தில் தேய்த்து மறு நாள் காலை நீராவியில் முகத்தை காண்பித்து வர முகத்திலுள்ள கரும்புள்ளிகள் மாறி விடும்.

### சொறி சிரங்குகட்கு

(இ) குப்பைமேனி இலையின் சாற்றை எடுத்துத்தடவி வர சொறி சிரங்குகள் ஆறிக் குணமாகும்.

Dr. N. சடையப்பன். S M.P.

சிவஞானமுனிவர் வழங்கும்

# உவமையில் பதின்மூன்று பேதங்கள்

வித்துவான். தா. குருசாமி தேசிகர், மதுரை.

3. உச்சிப்பளிங்கு: மத்தியான வேளையிலுள்ள சூரியன் ஒளியும், பளிங்கின் ஒளியும் போலவும் என்று விரிந்து, நிழலின் உபகார மின்றியே நீர் எக்காலத்தும் உவர்ப்பு, கைப்பு முதலிய சுவை களைப்பற்றி அது அதுவாய் நிற்பது போல, இறைவன் உபகாரமின்றி யே உயிர் எக்காலத்தும் விடயங் களைப்பற்றி, அது அதுவாய் 'நிற்கு மோ என்பார்க்குச் சூரியன் ஒளி பக்கத்திருக்கும் பொழுது அவ் வொளியைக் கொண்டே பளிங் கின் ஒளி பஞ்ச வன்னங்களைப் பற்றுதலும், சூரியன் ஒளி உச்சி யிலிருக்கும்பொழுது பளிங்கின் ஒளி அச்சூரியன் ஒளியோடு கலந்து ஒருவன்னங்களையும் பற்றுமலும் இருத்தல் போல், பெத்த காலத்து இறைவன் மறைந்து நிற்க, அவ் விறைவன் துணையைக் கொண்டே உயிர்கள் விடயங்களை அறிதலும், முத்திக் காலத்து இறைவனோடு உயிர்கலந்து எவ்விடயங்களையும், அறியா திருத்தலும், கூடுமென்ப துணர்த்துதற்கு 'உச்சிப்பளிங்கு' என்றூர்.

4. பகல் விளக்கு: சூரியனொளியும் பகற்காலத்து எதிர்ப்பட்டபளிங்கு தன் ஒளி மழுங்காதவாறு போல முத்திக் காலத்து உயிர்க்குத் தற் போதம் கெடுதலில்லையோ வென் பார்க்குப் பகற்காலத்து விளக்கின் ஒளி சூரியன் ஒளியில் அடங்கி நிற்பது போல முத்திக்காலத்து உயிர் தற்போதம் கெட்டு நிற்கு மென்பதுணர்த்துதற்கு 'பகல் விளக்கு' என்றூர்.

5. பால்நீர்: பாலும் அத்துடன் சேர்ந்த நீரும் போலவும், என்று விரிந்து, பகற்காலத்து விளக்கு செயலற்றிருத்தல் போல முத்திக் காலத்து உயிர்க்கு இன்பானுபவம் இல்லையோ வென்பார்க்குப் பால் தன்சுவை முழுதும் தன்னோடு கலந்த நீருக்காக்கி, நீருக்காக, நீரைத்தன்னுள் அடங்கி நிற்கச் செய்யுமாறு போல் இறைவனும் முத்திக்காலத்துத் தன் இன்பம் முழுதும் உயிருக்காக்கித் தன்னுள் அடங்கி நிற்கச் செய்யும் என்ப துணர்த்துதற்கு 'பால்நீர்' என்றூர்.

6. கண்ணிரவி: கண்ணொளியும் அதற்குப் பொருளைக் காட்டியும் கண்டும் உடனாய் நிற்கும் சூரிய னொளியும்போலவும் என்றுவிரிந்து

நீர் பாலொடு கூடிய வழி பாலின் சுவையாயும், பாலோடு கூடாத வழி தன் சுவையாயும் நிற்குமாறு போல, உயிர் இறைவனோடு கூடிய வழி இறைவனுக்குரிய இன்பமய மாயும் நிற்குமோ? என்பார்க்கு, கண் ஒளியுடைப் பொருளாயினும் அக்கண்ணொளி சூரியன் முதலிய பிறவொளியின் துணையை யின்றி எக்காலத்தும் பிரகாசிக்கமாட்டா தவாறு போல உயிர் அறிவுடைப் பொருளாயினும், இறைவனை யின்றி எக்காலத்தும் அறிய மாட்டாதென்ப துணர்த்துதற்குக் 'கண்ணிரவி' என்றார்.

7. உணர்வொளி: ஆன்மாவின் அறிவும், அவ்வறிவால் பொருளை யறியும் கண்ணொளியும் போலவும் என்று விரிந்து கண்ணொளியும் சூரியனொளியும் கலந்து நிற்பினும், கண்ணும் சூரியனும் வேறு வேறு இடத்திருத்தல் போல உயிரின் அறிவும், இறைவன் அறிவும், கலந்து நிற்பினும் உயிரும் இறை வனும் வேறு வேறிடத்தில் இருத் தல் கூடுமோ என்பார்க்குக் கண் ணொளியின் உள்ளீடாய் விரவி நிற்கும் உயிரையின்றிக் கண் ணொளி விடயத்தை அறியாத வாறு போல, உயிரின் உள்ளீடாய் உயிர்க்குயிராய் நிற்கும் இறை வனை யின்றி உயிர் ஒன்றனையும் உணராதாதலின் உயிரும் இறை வனும் வேறு வேறிடத்திலிருப்ப தில்லை எனவும் ஓரிடத்தில் கலந்து நிற்பதுண்டு எனவும் உணர்த்து தற்கு 'உணர்வொளி' என்றார்.

இவ்வேழுவமைகளும் உடனாய் நிற்றலை விளக்கி வந்தன.

இவ்வாறு 'பிரிக்கமுடியாத சிவசீவர்களின் அத்துவிதமாகிய கலப்பையே' சுத்தாத்துவிதம் என்றும் 'சுத்தாத்துவித சைவ சித் தாந்தம்' என்றும் கூறப்படும்.

இவ் அத்துவிதமாகிய கலப்பு அருளால் வரத்தக்கது; அனுபவத் திற்குக் கொண்டுவரச் செய்வது குருவருளே. சிவஞான முனிவர் அருளிய உரைப்பாயிரச் செய்யுள் வருமாறு:-

பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலந்
தீயிரும்பு பாணி யுப்பு
விண்ணநில முடலுயிர்நீர் நிழலுச்சிப்
பளிங்குபகல் விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோல் பிரிவரிய
வத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம் போற்றி

இச்செய்யுளால் அறியப்படும் அத்துவிதக் கலப்பின் பதின்மூன்று பேதங்களையும் வரிசைப்படுத்திக் காண்போம்.

உவமை: (I) ஒன்ருய் நிற்றல் மூன்று பேதங்கள்:

பண்ணிசை- I. உயிர்கள் இறையின்றித் தனித்து நில்லாது.

பரிதிமதி- II. தனித்து நிற்றல் இல்லையேனும் பொருளால் வேறுண்டு.

திலதயிலம்- III. எனினும் சிவனை உயிரிடமிருந்து பிரித்தறியாது.

(II) வேருய் நிற்றல் மூன்று பேதங்கள்;

தீ இரும்பு- I. உயிரின் வேருய் சிவன் நிற்பன்.

நீர் உப்பு- II. இறைவன் தனித்து நிற்பன்

விண்ணநிலம்- III. உயிர் எக்காலத்தும் இறைவனை விட்டுப் பிரிந்திராது.

(III) உடனுய் நிற்றல் ஏழு பேதங்கள்:

உடலுயிர்- I. இறைவன் உயிர்க்குயிராய் நிற்பன்.

நீர் நிழல்- II. உயிரினிடம் எக்காலத்தும் இறைவன் பிரிப்பின்றி இருப்பான்.

உச்சிப்பளங்கு- III. இறைவனேடு உயிர்கலந்து ஒரு விடயங்களையும் அறியாது இருக்கும்.

பகல் விளக்கு- IV. முத்திக் காலத்தில் உயிர் தற்போதம் கெட்டு நிற்கும்.

பால் நீர்- V. இறைவன் உயிர்க்குத் தன் இன்பம் முழுவதும் வழங்கித் தன்னுள் அடங்கி நிற்கச் செய்தல்.

கண்ணிரவி- VI. உயிர் அறிவுடைப் பொருளாயினும் இறைவனை யின்றி எக்காலத்தும் அறியமாட்டாது.

உணர்வொளி-VII. இறைவனும் உயிரும் வேறு வேறிடத்திலிருப்பதில்லை; ஓரிடத்திலேயே கலந்து நிற்பன்.

இது சிவஞான சித்தியாரின் உரைப்பாயிரக் கருத்தாகும்.

# சைவ சித்தாந்தம்

சித்தாந்த சிகாமணி, அருட்பாமணி,
S. இராமலிங்கம் B. Sc., (Ag) B. L.

சைவ சித்தாந்தத்தின் தத்துவமும் சிறப்பும்

பசுவர்க்கத்துள் சகலருக்கு, பதியும் பாசமும் அந்நிய சாதியாம்: விஞ்ஞான கலர், பிரளயாகலர்கள் தன் சாதியாம். பதிபாசங்களின் இயல்பையும் நீங்கி நிற்றல் சகலருக்குச் சிறப்பு இயல்பாம். பதி பாசங்களை ஒழித்துத் தன் சாதியாகிய விஞ்ஞான கலர், பிரளயாகலர் களுக்குச்சாமனமாய் பசு என்றிவற்றால் பொது இயல்பாம். இங்ஙனமே விஞ்ஞானகலர், பிரளயாகலர் ஆகிய ஏனைய பசுவர்க்கத்துக்கும் கண்டு கொள்க. இது போன்றே மல மாயை கன்மம் இவைகளுக்கும் கண்டு கொள்க.

மேலே, காட்சியிலே 4காட்சிகள் பற்றிப்பார்த்தோம். இலக்கணத் தைப் பார்ப்போம், சித்தியார் செய்யுள் 12 ல் இந்திரியக் காட்சி, மானதக் காட்சியைப் பற்றி இவ்வாறு சொல்லப்படுகிறது.

''உயிரிேைடு உணர்வு வாயில் ஒளி உருவாதி பற்றி
செயிற்று ஒரு விகற்பம் இன்றித் தெரிவது இந்திரியக்காட்சி
அயர்வு இல் இந்திரிய ஞானம் ஐம்புலன் சார்ந்து உயிர்க்கண்
மயர்வு அறவந்த ஞானம் மானதக் காண்டலாமே''

ஞானேந்திரியம், பூதங்கள், தன் மாத்திரைகள் ஆகிய இவற்றைப் பொருத்திச் சத்தாதி விடயங்களை நிருவிகற்பமாய் அறியும் அறிவு மானதக் காட்சி. சித்தியார் செய்யுள் 13-ல் தன்வேதனைக் காட்சி, யோகக் காட்சிகளைப் பற்றி இவ்வாறு கூறப்படுகிறது.

''அருந்து இன்ப துன்பம் உள்ளத்து அறிவினுக்கு அராகம் ஆதி
தரும் தன் வேதனைக் காட்சியாம் சமாதியால் மலங்கள் வாட்டிப்
பொருந்திய தேசம் காலம் இயல்பு அகல் பொருள்கள் எல்லாம்
இருந்து உணர்கின்ற ஞானம் நல்யோகக் காண்டல் ஆகும்''

அராகம் முதலிய ஐந்து தத்துவங்களாலும் செலுத்தப்பட்டு வரும் இன்ப துன்பங்களை அறியும் அறிவு தன் வேதனைக் காட்சி எனப்படும். மேலும் கீழும், நடுவும் ஆகிய மூவிடத்தும் உள்ள உலகங்கள் இறந்த

காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய முக்காலத்து முள்ள பொருட்கள் எல்லாவற்றையும் யோக சமாதியால் அறியும் அறிவு யோகக் காட்சி எனப்படும்.

அனுமானம் (கருதல்) என்பது தன் பொருட்டும், பிறர் பொருட்டும் என இருவகைப்படும். அதன் இலக்கணம் என்ன என்று பார்ப்போம். சிவஞான சித்தியார் செய்யுள் 14-ல்,

''பக்கமூன் றின் மூன்று ஏதுவுடைய பொருளைப் பார்த்து உணரத்
தக்க ஞானம் தன் பொருட்டாம், பிறர் தம் பொருட்டாம் அனு
மானம்
தொக்க இவற்றுல் பிறர் தெளியச் சொல்லலாகும் அச்செல்லும்
மிக்க அந்நுவயத்திஞெடு எதிரேகச் சொல் என இரண்டாம்''

இயல்பு, காரியம், அனுபலத்தி என்னும் மூன்று ஏதுக்களில் ஒரு ஏதுவுடைய பொருளைப் பக்க மூன்றிலும் வைத்து உணரும் உணர்ச்சி தன் பொரூட்டனுமானம். அவ்வேது முதலியவற்றுல் பிறர் அறியும் படி உரைக்கும் அறிவு பிறர் பொருட்டனுமானம். அப்படி பிறர் அறியும்படி உரைக்கும் சொல் உடன்பாட்டுச்சொல், எதிர் மறைச் சொல் என இருவகைப்படும்

இம் மூவகைப் பக்கங்களின் இலக்கணத்தைச்சிவஞான சித்தியார் செய்யுள் 15-ல்

மூன்று பக்கம், பக்கம் நிகர்பக்கம், பக்க நிகரில் பக்கம் எனத்
தோன்றும் பக்கம் துணிபொருளுக்கு இட மாம் உவமை நிகர்பக்கம்
ஆன்ற பொருள் சென்றடையாத இடம்நிகரில் பக்கம் ஆம்
இன்றும்
ஏன்ற இரண்டு பொருள் உண்மைக்கு இடம் ஒன்று பொருள்;

பக்கம் = பக்கம்
நிகர்பக்கம் = சபக்கம்
நிகரில்பக்கம் = விபக்கம்
''இம்மலை நெருப்புடைத்து'' எதனுல்? புகைமை யுடையான்.
எதுபோல்? ''அடுப்பு போல்'' என்னும் உதாரணத்தில் ஒரு பொருளை அனுமானித்து அறிவதற்குப்பக்கம், சபக்கம் விபக்கம் என மூன்று உணர்ச்சிகள் தேவைப்படும்.

மூவகை ஏதுக்கள் என்ன, அவைகளின் இலக்கணம் என்ன என்று சித்தியார் செய்யுள் 16-ல்

''ஏது மூன்றும் இயல்பு காரியம் அனுபலத்தி இவை
ஓதின் இயல்பு மாமரத்தைக் காட்டல் உறுகாரியம் புகை
தன் ஆதியாய அனல் காட்டல் ஆகும் அனுபலத்தியது
சீதமின்மை பனியின்மை காட்டல் போலும் செப்பிடின்''

இயல்பு-இயற்கை. காரியம்-காரணத்தால் ஆயது, ஆக்கப்பட்டது: அனுபலத்தி-அறியாமை (இல்லை என்றறியும் அறிவு.) அந்-எதிர்மறை உபபலத்தி-அறிதல். உப-சமீபம், கிட்ட.லப்தி-பெறுதல், அடைதல்.

மா முதலிய சொற்கள் மரமாகிய பொருளை உணர்த்தும். புகையாகிய காரியம் நெருப்பாகிய காரணத்தை உணர்த்தும். குளிரின்மை (குளிர் இல்லாவிட்டால்) பனியின்மை (பனியில்லை) என்றதை உணர்த்தும். ஆகவே உணர்ச்சி மூவகைப்படும். அதுபோல் ஏதவும் மூவகைப்படும்.

மேற்கூறிய அந்நுவய, எதிரேகச் சொற்களின் இலக்கணம் என்ன என்பதைச் சித்தியார் செய்யுள் 17-ல்

''புகையால் அனலுண்டு அடுக்களைப்போல் என்னப் புகறல் அந்நுவயம்
வகையாம் அளவிலா இடத்துப் புகையின்றாகும் மலரினெடு
முகை ஆர் நீரில் போல் என்று மொழிதல் வெதிரேகச்சொல் இவை
தொகை ஆர் ஐந்து உறுப்பொடுங்கூட துணிந்துசொல்லு வாருமுளர்.

அந்நுவயம்=உடன்பாடு, உண்மை
அநு+அயம்—அந்வயம்
அநு-பின், அயம்=போதல். அது அந்நுவயம் என்றாயிற்று
எதிரோகம்=எதிர்மறை, இன்மை

வியதிரேகம் என்னும் வடமொழிச்சொல் வெதிரேகம் எனத் தற்பவமாயிற்று.

மேற்சொன்ன பக்கம் முதலிய மூன்றில் வைத்து ஏதுக்கள் மூன்றனுள் ஒன்றை வைத்து ஒருவன்தான் அறிந்ததைப் பிறர்க்குப் போதிக்கும்போது உடன்பாட்டுச் சொல்லாலும், எதிர்மறைச் சொல்லாலும் உணர்த்துதல் சைவரது முறை.

இந்தச் செய்யுளில் சொல்லப்பட்ட உதாரணத்தில் மேற்கோள் ஏது, திருட்டாந்தம் என மூன்று உறுப்புகள் அடங்கியுள்ளன. அது;-

இம்மலை நெருப்புடைத்து (மேற்கோள்)
புகைமையுடையான் (ஏது)

அடுக்களைபோல் (திருட்டாந்தம்)

என்பதில் தெளிவாகிறது.

அனுமானத்தில் அடங்கும் பிற அளவைகள் உண்டு. அவையின் இலக்கணம் என்ன என்று சித்தியார் செய்யுள் 18-ல்,

''போது நாற்றத்தால் அறிதல் பூர்வ காட்சி அனுமானம்
ஓதும் உரையால் அறிவின் அளவு உணர்தல் கருதல் அனுமானம்இப்
போது நீதியான் நிகழ்வது முன் கன்மபலம் இச்செய்தி
ஆதியாக பயன்வரும் என்று அறிதல் உரையால் அனுமானம்''

உரை என்பது சிவாகமம் எனப்பொருள்படும். அது மூவகைப்படும். அவை என்ன என்றும் அதன் இலக்கணத்தையும் சித்தியார் செய்யுள் 19-ல்

''அநாதியே அமலன் ஆய அறிவன்நூல் ஆகமம்தான்
பின்ஆதி மாறு இன்றிப் பேணல் தந்திர மந்திரங்கள்
மனுதிகள் அடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை ஆகும்
தன் ஆதிஈறு இலாதான் தன்மை உணர்த்துதல் உபதேசந்தான்''

வேதாகமங்களின் கரும காண்டத்திற் சொல்லப்படும் கிரியைகளை அனுட்டிக்கும் வகையைத் தெரிவது தந்திர உரையாகும். உபாசன காண்டத்தில் சொல்லப்படும் கடவுள் வழிபாட்டைத் தெரிவது மந்திர உரையாகும். ஞானகாண்டத்தில் சொல்லப்படும் பதிபசுபாசங் களின் இயல்பைத் தான் உணருமாறும் பிறர்க்கு உணர்த்துமாறும் தெரிவது உபதேச உரையாகும். ஆக உரை என்பது தந்திரம், மந்திரம், உபதேச உரை என மூவகைப்படும் என்று அருளப்படுகிறது.

எனவே சைவ சித்தாந்தம் மேற்கூறிய அளவைகளாகிய காண்டல் (காட்சி), கருதல் (அனுமானம்), உரை (சிவாகமம்) இவைகளைக் கொண்டு ஆராய்ந்து பதி, பசு, பாசம் இவைகளின் இயல்புகளையும் தெளிந்து உயிர் உய்யும் வகையைத் தெள்ளத் தெளிவாக எடுத்து இயம்புகிறது. அருணகிரிப் பெருமான் ''அறிவால் அறிந்து உன் இருதாள் இறைஞ்சி'' என்றும், அப்பர் பெருமான், ''ஞானத்தால் தொழுவார் சிவஞானிகள்'' என்றும் அருளியுள்ளார்கள். இறைவன், சுட்டியுணரக் கூடிய பொருளோ அல்லது தர்க்கரீதியாக அறியக் கூடிய பொருளோ இல்லை. அப்படியிருக்க இந்தத்தர்க்கங்கள் எவ்வாறு அடைய வழிகோலும் என ஐயம் எழும். நாம் இந்தத் தர்க்க ரீதியில் யாவற்றையும் ''கண்ட இவை நான் அல்லேன்'' என்று பிரித்தறிந்து சிவோகம் பாவனையைக் கடைப் பிடித்தால் சிவபதவி கிடைக்கும் என்பதற்கு யாதொரு ஐயமும் இல்லை.

# பஞ்சாயதன பூஜை*

மு. அருணாசலம்

சமீப காலத்தில் எங்குப் பார்த்தாலும் பஞ்சாயதன பூஜையைப் பற்றிய பேச்சு அதிகமாக இருக்கிறது. ஐயப்பன் இயக்கம் போல இதுவும் ஒரு புதிய இயக்கம் என்று பலர் கருதி வருகிறார்கள்; இது சைவர்களையும் வைணவர்களையும் ஒன்றுபடுத்தவல்ல ஒரு புதிய இயக்கமாகும் என்று கருதுகின்றார்கள். ஆனால் முதலில் இதுவொரு புதிய இயக்கமல்ல, ஐயப்பன் இயக்கம் போல பழைய வைதிக ஆசாரங்களுக்கு எல்லாம் புறம்பானதல்ல என்று நாம் சொல்லியாக வேண்டும். இது ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டுள்ளபுராதனமான ஒரு பூஜை முறையே ஆகும். ஸ்மிருதியைப் பின்பற்றுபவர்களான ஸ்மார்த்தர்களுக்குரிய ஒரு வழிபாட்டு அல்லது பூஜை முறையாகும். ஆனால் இதுவொருகாலத்திலும் சைவர்களாலோ, வைணவர்களாலோ பின்பற்றப்பட்டதில்லை.

காலத்தில் பின்வந்த பல்வேறு உபநிடதங்கள் அவையவை எந்தத் தெய்வத்தைப் பரம்பொருளாகக் கொண்டிருந்தனவோ அந்தத்தெய்வத்தின் பூஜையை வலியுறுத்திச் சொல்லி வந்துள்ளன. உதாரணமாகக் கைவல்ய உபநிடதம் பின்வருமாறு கூறுவது காணத் தக்கது:

உமா சகாயம் பரமேச்வரம் ப்ரபும்
திரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம்
த்யாத்வா முனிர் கச்சதி பூதயோனிம்
சமஸ்த சாக்ஷிம் தமசா பரஸ்தாத் ||

'உமா சகாயனும், முக்கண் உடையவனும், நீல கண்டனும், சாந்தி அளிப்பவனும் ஆகிய பரமேசுவரனை ஞானியானவன் தியானித்து மெய்யின்பத்தையும் அடைகிறான்.

---

* இக் கட்டுரை சித்தாந்தம் ஆங்கில இதழில் வெளி வந்ததின் தமிழாக்கம். ஆங்கிலத்தில் எழுதியவரும் மொழி பெயர்ப்புச் செய்தவரும் இவரே.

நன்றி: சித்தாந்தம் ஆங்கில ஏடு.

இதுபோல, கணபதி உபநிஷத், தேவி உபநிஷத், சூரிய உப நிஷத், நாராயண உபநிஷத் போன்றன பரஞானத்தையும் பேரின் பத்தையும் அடைவதற்குத் தங்கள் தங்கள் தெய்வங்களையே பூஜித்து உபாசிக்க வேண்டுமெனப் போற்றிச் சொல்லுகின்றன. இந்தப் பூஜைகள் யாவும், ஸ்மிருதிகளிலும், புராணங்களிலும் விதிக்கப் பட்டு இருப்பதால் ஓரளவு வைதிக பூஜை என்றும், தந்திர பூஜை என்றும் கொள்ளலாம். ஆனல் இவை ஆகம பூஜைகளோ சைவ நெறிப் பூஜைகளோ அல்ல. இன்னும் பிற்பட்ட காலத்தில் புராண காரர்கள் ஐந்து தெய்வங்களுக்குரிய ஒரு சமஷ்டிப் பூஜா முறையை வகுத்து, அதற்குப் பஞ்சயதன பூஜை என்று பெயரிட்டார்கள் என்று தோன்றுகிறது.

ஆயதனம் என்றல் இடம் அல்லது உறைவிடம் என்று பொருள். ஆகவே பஞ்ச ஆயதனம் என்றல் ஐந்து தெய்வங்கள் அமருமிடம் அல்லது அவர்களை ஆவாகித்துப் பூஜிக்கும் இடம் என்று பொருள் படும்.

உபநிடதங்கள் பஞ்ச தேவதைகளை எங்கும் சொல்லவில்லை. ஆகமங்களும், பஞ்ச தேவதையின் பூஜையைச் சொல்லவில்லை. ஆனல் பண்டைக் காலத்தில் இருந்தே ஐந்து தெய்வங்களைத் தனித் தனியாகப் பூஜிக்கும் முறை இருந்து வந்திருக்கின்றது. ஆயினும் ஐந்து தெய்வங்களையும் ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் பூஜிக்க வேண்டுமென்பது ஸ்மிருதிகளே விதிக்கின்றன. ஸ்மிருதி சாரம் பின் வருமாறு சொல்லுகிறது:

ஆதித்யம் அம்பிகாம் விஷ்ணும்
கணநாதம் மசேச்வரம்
பஞ்ச யக்ஞ பரோ நித்யம்
கிருகஸ்த: பஞ்ச பூஜையேத் ll

இல்லறத்தான் இவ்வைந்து தெய்வங்களையும் தினந்தோறும் பூஜிக்க வேண்டும் ஐந்தாவன: அதித்தன் (சூரியன்) அம்பிகை(சத்தி) விஷ்ணு, கணபதி, மகேசுவரன் (சிவன்). தேவி பாகவதம் ஒன்பதா வது ஸ்கந்தத்தில் பஞ்சாயதன பூஜையைச் சொல்லுகிறது. சொல்லு மிடத்து சத்யவான் சாவித்திரி வரலாற்றை விரிக்கிறது. சாவித்திரி யமனேடு வாதாடிக் கொண்டே வருங்காலத்தில் நரக வேதனை களில் இருந்து தப்புவதற்கான சாதனங்கள் யாவை என்று கேட் கிருள். அப்போது யமன் 'இந்தப் பஞ்ச தேவதைகளை வழிபடுபவர் களுக்குக் கனவிலும் கூட நரகபயம் இராது' என்று சொல்லி இந்த வழிபாட்டால் வரும் புண்ணியங்களை விவரிக்கிருன். 'இந்தப் பூஜை

யினல் பிறப்பிறப்புக்கள், மூப்பு, நோய், துக்சம் இவை அழிகின் றன. இது முழுமையும் நன்மையே தருவது. எல்லாச் சித்திகளே யும் தருவது. பேரின்பத்தை விளக்கவல்லது. நரகத்திலிருந்து காப் பது பக்தி என்ற விருட்சம் முளைப்பதற்குக்காரணமாக உள்ளது வினை என்ற மரத்தை வீழ்த்தி விடுகிறது. நித்தியமான ஆனந்தத்தைத் தருகிறது. எம தூதர்களிடமிருந்து காக்கிறது.

இருந்துங் கூட இந்தப் பஞ்ச தேவதைகள் யாவர்? இவர் களுடைய வழிபாட்டுக் கிரமம் என்ன? என்பவை எங்கும் ஒரு தன்மையாகச் சொல்லப்படவில்லை லோகாக்ஷி ஸ்மிருதி சொல்வது பின்வருமாறு: 'மத்தியில் மகேசுவரனை ஆவாகித்து ஏனைய நால் வரையும் பரிவார தேவதைகளாக நான்கு திக்குகளிலும் வைக்க வேண்டும். சூரியன் - கிழக்கில், சக்தி - தெற்கில், விஷ்ணு - மேற்கில், கணபதி - வடக்கில். இது 'சிவ பஞ்சாயதன பூஜை' இங்கு சிவம் - பிரதான தேவதை. மற்ற நால்வரும் பரிவாரங்கள்.

பத்மபுராணம் சூரியனைப் பிரதான தேவதையாக மத்தியில் வைத்து, கணபதி, தேவி, ருத்திரன், நாராயணன் ஆகியோரை நான்கு திக்குக்களிலும் பரிவார தேவதைகளாக அமைக்க வேண்டு மெனச் சொல்கிறது. இது ஆதித்திய பஞ்சாயதன பூஜை.

விஷ்ணு பஞ்சாயதனம் என்பது விஷ்ணுவைப் பிரதான தெய்வ மாக மத்தியில் வைத்து சிவம், கணபதி, சூரியன், சத்தி என்ற நால்வரையும் நான்கு திக்குகளிலும் அமைக்கும் பூஜையாகும். பெரும்பாலான நூல்கள் பரிவார தேவதைகளை நான்கு. பிரதான திக்குகளிலும் அமைக்காமல் ஈசானம் தொடங்கி வலமாக நான்கு கோணங்களிலும் அமைங்கும்படி கூறுகின்றன. இவையெல்லாம் வைதிக சமஷ்டி பூஜையாகும் அதாவது ஐவருக்கும் சேர்ந்த பூஜை. தாந்திரிக முறையைப் பின்பற்றுபவர்களுக்கு நூல்கள் தனித் தனி பூஜை செய்வதாகிய வியஷ்டி முறையையும் கூறுகின்றன.

இந்த ஐந்து பூஜைகளின் நோக்கத்தையும் நூல்கள் தெளிவு செய்கின்றன. விக்கினங்களின் நீக்கத்துக்குக் கணபதி; உடல் ஆரோக்கியத்துக்குச் சூரியன்; தூய்மைக்காக அக்னி. (இங்கு அக்னி என்பது அக்னி கர்ப்பனுகிய முருகனைக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும்). செல்வத்துக்காக விஷ்ணு. ஞானத்துக்காகச் சிவன். (சிவன் ஞானேசன் ஆனமையால்) முக்திக்காக சிவை (சக்தி). இங்கு ஐந்து தெய்வங்கள் என்ற நிலையில் ஆறுவதாக முருகனைச் சேர்ந் திருக்கவும் காண்கிறோம். இந்நிலை பிற்காலத்தில் சண்மதம் என்ற

கருத்து எழுந்ததைத் தழுவி ஏற்பட்ட ஒரு நிலை. பஞ்சாயதனம் ஒரு பூஜாநெறி. சண்மதம் என்பது ஆறு தெய்வங்களைப் போற்றுகின்ற பக்தி நெறி. இது வேறு; அது வேறு.

பஞ்சாயதனம் குறித்துப் பின்னும் சில இங்குக் கூறுதல் பொருந்தும். பஞ்சாயதன பூஜை அதன் அமைப்பினாலேயே அது ஒரு வகை ஆன்மார்த்த பூஜை என விளங்கும். பரார்த்தத்தில் பஞ்சாயதனமில்லை; இருக்க முடியாது. இது காலையிலோ நண்பகலிலோ செய்யத் தகுந்தது.இப் பூஜையை பிம்பங்களிலும்,படங்களிலும்யந்திரங்களிலும் செய்யலாம்.இந்தப் பூஜையில் தினசரி அபிடேகமில்லை. (ஆனால் சைவத்தில் படமும் யந்திரமும் இல்லை, சைவ பூஜைக்குரிய இடம் மூன்று - ஸ்தம்பம் (பாணம், சிவலிங்கம்), பிம்பம் (மூர்த்தம்) கும்பம்.) பிம்பங்களுக்கும் யந்திரங்களுக்கும் பருவ காலங்களில் மாதப்பிறப்பு, ஜன்ம நட்சத்திரம், துவாதசி, பூர்ணிமா அமாவாசை ஆகிய விசேஷ சந்தர்ப்பங்களில் - அபிடேகம் செய்யலாம். மார்கழி மாதம் முழுமையும் காலையில் பூஜை செய்யவேண்டும். இந்தப் பூஜையினால் ஆயிரம் ஆண்டுகள் பூஜை செய்த பலன் கிட்டும்.

பஞ்சாமிர்த அபிடேகம் முத்தியளிக்கவல்லது. பஞ்சாமிர்தமாவது பால், பழம், நெய், தேன், சர்க்கரை என்பனவற்றின் கலவை. அபிடேகத்தின் போது ஈசானஸ் சர்வ வித்யானும், தத் புருஷ, அகோர. வாமதேவ, சத்யோஜாத மந்திரங்கள் சொல்ல வேண்டும் ஆவாகனம், ஆசனம், பாத்யம், ஆர்க்கியம், ஆசமனம், மதுபர்க்கம். ஸ்நானம், வஸ்திரம், உபவீதம், கந்தம், புஷ்பம், தூபம் தீபம் நிவேதனம், கற்பூரம், பிரதட்சண நமஸ்காரம் ஆகிய பதினாறு உபசாரங்களையும் செய்ய வேண்டும்.

அருச்சனைக்கு மணமுள்ள மலர்கள் சிறப்பு. சில தெய்வங்களுக்குச் சில மலர்கள் விலக்கு. சூரியனுக்கு வில்வமும், கணபதிக்குத் துளசியும், அம்பிகைக்கு அறுகும், விஷ்ணுவுக்கு ஊமத்தையும், சிவனுக்குத் தாழையும் ஆகாதவை வில்வமும் துளசியும் பலநாள்கள் வரை உபயோகிக்கலாம். மலர் எடுப்பதற்கும் மந்திரங்கள் சொல்லப்படுகின்றன. சிவனுக்கு விருப்பமான பத்திரமாகிய வில்வதுக்கு ஒரு சிறப்பான சுலோகம் சொல்வதுண்டு. வில்வ விருட்சத்தை வணங்கி, அதன் இலைகளைப் பறிப்பதை க்ஷமிக்கும்படி அது வேண்டுகிறது. 'விருட்ச ராஜனாகிய வில்வமே! உனக்கு நமஸ்காரம். பூஜையினால் பெறத்தக்க பலன்களுக்கெல்லாம் நீயே காரணம். சலோக, சாமீப சாரூப, சாயுச்சியப் பதவிகளை நீயே தருகிறாய்.

பிரம்ம, விஷ்ணு, ருத்த வடிவமாக நீயே இருக்கிறாய். சம்சாரமாகிய விஷத்தை நீக்கும் வைத்யநாதனாகிய பரமேசுவரனுக்கு அர்ச்சிப்பதற்கு உனது இலைகளை எடுத்துக் கொள்கிறேன். க்ஷமிப்பாயாக.'

கடவுளுடைய படைப்பில் தாவரமும் ஒன்று என்பதை உணர்ந்து அதற்கும் இந்துசமயம் போதிய மாரியாதை காட்டுகிறது என்பதை இது நன்கு உணர்த்த வல்ல சான்றாகும். இதனோடொத்த ஒரு கருத்து பூதேவிக்குச் செய்யும் பின்வரும் அஞ்சலியாகும்.

சமுத்ர வசனே தேவீ
பர்வத ஸ்தன மண்டலே
விஷ்ணு பத்னி நமஸ்துப்யம்
பாதஸ்பர்சம் க்ஷமஸ்வமே. ||

சமுத்தரத்தை ஆடையாகவும் பர்வதங்களை மார்புகளாகவும் உடைய விஷ்ணுபத்தினியாகிய உன்னை'நமஸ்காரிக்கிறேன். காலால் உன்னைத் தீண்டுவதை மன்னிப்பாயாக''

தூபம் என்பது மணமிக்க பொருளால்'திருவடியில் காட்ட வேண்டும். தீபம் பசு நெய்யால் ஏற்ற வேண்டும். அதில் ஒன்று, மூன்று, ஐந்து திரிகள் இடலாம். தீபத்தைத் திருமுகத்திற்கு எதிரில் காட்டவேண்டும். தூபதீபம் யமபயத்தைப் போக்குகிறது. சுந்தான்ன நிவேதனம் செய்ய வேண்டும். அதனளவு ஒருவர் ஒருவேளை உட்கொள்ளும் ஆகாரத்தின் அளவாகும். பின்னர்த் தாம்பூலம் கற்பூரம் நமஸ்காரம் தொடர்கின்றன. பூஜை செய்பவர் மந்திரமும் குருவும் சிவமே எனக் கருத வேண்டும். அவருக்கு ஐந்து லட்சணங்கள் சொல்லப்பட்டுள்ளன: திருநீறு, உருத்திராக்கம், பஞ்சாட்சிர ஜபம், ருத்திர மந்திரத்தோடு கூடிய அபிடேகம், வில்வ பத்திரத்தால் அர்ச்சனை, பிரதட்சண நமஸ்காரம்.

இதுவே பஞ்சாயதன பூஜையும் அதற்குரிய முறையுமாகும். இது பெரும் பகுதி சிவத்துக்கு உரியது. முழுமையும் சிவபூஜையின் லட்சணங்களைத் தழுவியது. ஆனால் இது சைவருக்கோ வைணவருக்கோ சொல்லப்பட்டது அன்று. அகம் பிரும்மாஸ்மி என்ற கொள்கையைக் கடைபிடிக்க வேண்டியவர்களாகிய சங்கர அத்வைதிகள் என்னும் ஸ்மார்த்தர்களுக்காக இது செரல்லப்பட்டது. பூஜா முறையின் பல அங்கங்கள் இதனுள் கொள்ளப்பட்டுள்ளன. முன் கூறியது போல இது சொந்தபூஜை – ஆன்மார்த்த பூஜை. இது கோயில் பூஜையல்ல. பரார்த்த பூஜையல்ல. சைவர்களைப் பொறுத்த வரை

யில் ஆத்மார்த்த பூஜையும் பரார்த்த பூஜையும் ஒன்றே. பரார்த்த பூஜையில் கொள்ளப்படாத எந்தச் சடங்கும் ஆன்மார்த்த பூஜையிலும் இடம் பெறாது.

சைவ வழிபாட்டு முறைகளையும் வைணவ வழிபாட்டு முறைகளையும் ஒற்றுமைப்படுத்துகின்ற ஒரு சிறந்த சாதனம் பஞ்சாயதன பூஜை என்றும், இன்று காணப்பெறும் பலவிதக் குறைபாடுகளை அகற்ற வல்ல ஒரு பெரிய வரப்பிரசாதமென்றும் இதைச் சைவர் பலர் கருதுகிறார்கள். (வைணவர் அவ்வாறு கருதவில்லை.) ஆனால் பஞ்சாயதனப் பூஜைக்கு நியாயம் எதுவாயிருந்தாலும் அது ஆகம விதிக்கு ஒத்ததல்ல என்றும், ஆகமத்தில் சொல்லப்படவில்லை என்றும் நாம எடுத்துக் காட்டக் கடமைப் பட்டுள்ளோம்.

பஞ்சாயன பூஜை என்பது கணபதி, சூரியன், சக்தி, சிவம், விஷ்ணு என்ற ஐந்து தெய்வங்களுக்குச் செய்கின்ற பூஜையாகும். இது ஆகமங்களில் சொல்லப்படாமையாலும், இதன் சடங்குகளுக்கு ஆகமவிதி காணப்படாமையாலும் இதை யாரும் எப்படியும் செய்யலாம் என்று பொருளாகிறது. ஆகம பூஜை அங்கங்கள் சில இங்குள்ளன. இவை சட்டாயமில்லை. அவரவர் விருப்பம் போல் கொள்ளத்தக்கவை. இதற்கு சாஸ்திர சம்பந்தம் உண்டென்று காட்ட வேண்டி வைதிக பூஜை என்ற பெயர் சூட்டப்படுகிறது. வைதிக பூஜை என்ற பெயரிலேயே முரண்பாடு உள்ளது. ஏன் எனில் வேதத்தில் அக்கினிகாரியம் அல்லது யக்ஞம் தவிர வேறெந்தப் பூஜையும் சொல்லப்படவில்லை. பின்னால் சமுதாயம் வளர்ந்த காலத்தில் பிராமண சமூகத்தார் சிவாகமங்களிலும் பத்ததிகளிலும் இருந்து பல விதிகளைத் தொகுத்துத் தாங்கள் பின்பற்றி வந்த பூஜா முறைகளையும் சேர்த்து, அதற்கு வைதிக பூஜை என்றும் பூஜா விதானம் என்றும் பெயர் சூட்டியுள்ளனர். இந்தத் தெய்வங்களின் பெயர் வேதத்தில் கூறப்படவில்லை. எனவே இவற்றின் பூஜையை வைதிக பூஜை என்பது பிழை. தவிர, இதற்குத் தகுதி அளிக்கும் திட்சைக் கிரியையும் இல்லை, பூஜையை அனுக்கிரகிக்க வல்ல சம்பிரதாய ஆசாரியரும் இல்லை.

ஆனால் சிவ பூஜையை நோக்கும்போது அங்கு ஆறு பூஜைகளின் ஒருமைப்பாட்டைக் காண்கிறோம். ஆத்மார்த்த பூஜை, சூரிய பூஜையோடு தொடங்குகிறது. சூரியனே உலகில் உயிர்களுக் கெல்லாம் ஒளியும் வெப்பமும் தந்து பாதுகாப்பதினால், சிவபெருமானின் பிரத்தியட்ச வடிவமாக விளங்குகிறான். இதுவே சௌர பூஜை. சிவபூஜை

யில் முதல் அங்கம். பூஜா ஸ்தானத்தில் தென் கிழக்கு மூலைப் பகுதியில் இது நடைபெறுகிறது.

இரண்டாவது, மூன்றாவது, கணபதி ஸ்கந்த பூஜைகள். இவை வடமேற்கு, வடகிழக்கு மூலைகளில் நடைபெறுகின்றன. ஸ்கந்தருக்கு மேற்கில் பிரும்ம, விஷ்ணுக்கள். இங்கு விஷ்ணுவும் ஒரு சிவ பரிவார மூர்த்தியாகி விஷ்ணு பூஜையும் நடைபெறுகிறது. அடுத்துப் பிரதானமான சிவ பூஜை. சிவ ஸ்தானத்துக்குக் கிழக்கே சக்தி பூஜை. கடைசியில் சிவ ஸ்தானத்துக்கு வட கிழக்கில் ஒரு சண்டேச பூஜை. இவ்வாறு ஒருமித்த சிவ பூஜையில் ஆறு பூஜைகள் அடங்குகின்றன. இறுதியானது சண்டேசுவர பூஜை. சண்டேசுவர பூஜை நிறைவேறா விட்டால் சிவ பூஜை பூர்த்தியாகாது-ஆன்மார்த்தத்திலும் சரி, பரார்த்தத்திலும் சரி.

சண்மதங்கள் என்பன ஆறு வகையான தெய்வ வழிபாட்டு முறை. தெய்வங்களாவன சூரியன், கணபதி, குமரன், சிவன், சக்தி, விஷ்ணு. இவ் வழிபாடுகள் முறையே சௌரம், காணபத்தியம், கௌமாரம், சைவம், சாக்தம், வைணவம் என்று பெயர் பெறும். இவை யாவும் சேர்ந்து சைவக் கிரியா பூஜையில் ஒருமித்து ஒன்றியிருப்பதை மேலே காட்டினோம். சைவத்தில் பஞ்ச குருமாராகிய கணபதி, ஸ்கந்தர், சிவம், சத்தி, விஷ்ணு ஆகிய ஐவரில் விஷ்ணுவும் ஒருவர் ஆகையால் அவருக்கும் சிவ பூஜையில் ஒரு குருஸ்தான பூஜை நடக்கிறது.

சண்மதம் வேறு; சட்தரிசனம் வேறு. சண்மதம் என்பது சமய நெறி. சட் தரிசனம் என்பது தத்வ நெறி. சட் தரிசனங்களாவன: கபிலருடைய சாங்கியம், பதஞ்சலியின் யோகம், கௌதமரின் நியாயம், கணாதரின் வைசேஷிகம், ஜைமினியின் பூர்வ மீமாம்சை, பாதராயணரின் உத்தர மீமாம்சை என்னும் ஆறு.

சிவபூஜை என்பது சௌராதி சண்டாந்தம் என்று சொல்லப்படும். சூரியன் முதல் சண்டேசுரர் வரை. மேலே சொல்லியவற்றால் பஞ்சாயதனத்துக்கும் பஞ்ச மூர்த்திக்கும் சம்பந்தமில்லை. சிவாலயங்களில் பிரும்மோற்சவ காலங்களில் பஞ்சமூர்த்தி புறப்பாடு நிகழும். பஞ்ச மூர்த்தி யாவார்: கணபதி, சுப்பிரமணியர், சிவம் (சோமாஸ்கந்த மூர்த்தம்) அம்பிகை, சண்டேசர். சண்டேசர் சிவ பூஜைகளிலும் கோயில் விழாக்களிலும் இன்றியமையாத இறுதியங்கம்.

எனவே இதுகாறும் கூறியவற்றால் பஞ்சாயதன பூஜை என்பது நாமாக விரும்பிச் செய்கின்ற ஒரு பூஜை வகை என்றும், அதற்கு ஆகமத்திலோ, கோயிலிலோ இடமில்லை என்றும், சைவர்களுக்கு அது உரியதல்ல என்றும், ஸ்மார்த்தர்களுக்கே அது உரியது என்றும் நன்கு விளங்கும்.

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை

# கந்தபுராணப் படன நிறைவு விழா
## திருச்செந்தூர்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித்**
**தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**
அருளாணையின் வண்ணம் நிகழ்த்தப் பெறுவது.

இடம்: திருச்செந்தூர் ஸ்ரீ சிவக்கொழுந்தீசுவரர் ஆலயம்

நாள்: **27—9—81** ஞாயிற்றுக்கிழமை

நேரம்: இரவு **7-00** மணி

தலைவர்: திரு. க. மெய்கண்டமுத்து அவர்கள்
(தலைவர், சைவ வேளாளர் ஐக்கிய சங்கம்.)

பாராட்டுவோர்: அறிஞர் பலர்.

**13—11—80** முதல் ஸ்ரீ காசிமடம்
அறக்கட்டளையின்வண்ணம் கந்தபுராணம் படனம் செய்த திரு. பா. சந்திரசேகரன் பிள்ளை அவர்கள் கந்த புராணப் படன நிறைவேற்றம் செய்து பாராட்டுப் பெறுவர்.

நமரங்காள் வருக.

ஆணையின் வண்ணம்,
முத்து. மெய்கண்டதேவன்,
மானேஜர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

# திருக்கோயில்கள்

எம். கே. பாலசுப்பிரமணியன், ஐ. ஏ. எஸ். சென்னை.

பொதுமக்களின் குறைகளைக் கேட்டு விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் நீதி மன்றங்களாகவும் கோயில்கள் பணியாற்றி வந்தன. சுந்தரர்க்கும் இறைவனுக்கும் நேர்ந்த வழக்கு திருவெண்ணெய் நல்லூர்க் கோயிலிலும், நீலி என்பவளுக்கும் வணிகன் ஒருவனுக்கும் நேர்ந்த வழக்கு பழையனூர்த் திருவாலங்காட்டுக் கோயிலிலும் விசாரிக்கப்பெற்றன என்னும் இலக்கியச் செய்திகள், இங்கு நாம் நினைவுகூரத்தகும். திருமாற்பேறு, கூகூர், திருவெறும்பியூர், திருப்பனந்தாள் முதலிய தலங்களில் கல்வெட்டுக்களும், கோயில்கள் பண்டை நாளில் நீதி மன்றங்களாகத் திகழ்ந்து வந்த செய்தியினை உணர்த்துகின்றன.

## 10. அறச்சாலைகள்:

கோயில்கள் பலவகை அறச்செயல்கள் நடைபெறுவதற்குரிய நிலைக்களமாக இருந்தன. கோயில்களை அடுத்துப் பல திருமடங்களும் அறச்சாலைகளும் தோன்றி நடைபெற்று வந்தன. திரிபுவனம், எண்ணாயிரம், திருமுக்கூடல், பாகூர், முதலிய இடங்களில் சிறந்த கல்வி நிலையங்களும், அவற்றில் பயிலும் மாணவர்களுக்கு இலவச உணவு, உறையுள் வசதிகளும், மிகப்பெரிய அளவில் ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தமை, கல்வெட்டுக்களால் புலனாகின்றன.

## 11. மருத்துவமனைகள்

மக்களின் மனப்பிணியை அகற்றி, உயிர் நோயைத் தீர்ப்பதற்கென அமைந்த கோயில்களில் அவர்களின் உடற் பிணிகளைத் தீர்த்து உதவுவதற்கும், தக்க வசதிகள் செய்யப்பெற்றிருந்தன. திருமுக்கூடல், திருவாவடுதுறை, திருவாமாத்தூர் முதலிய பல தலங்களில் மருத்துவமனைகளும், திக்கற்றோர் இல்லங்களும் நடத்தப்பெற்றன.

## 12 நீதிநிலையம்

தமிழகக் கோயில்கள், இந்நாளைய நிதிவைப்பு நிலையங்களாகிய வங்கிகள் போலவும், பண்டு பொதுமக்களுக்குப் பணிபுரிந்து வந்தன. திருப்புத்தூர், குமாரமார்த் தாண்டபுரம்,

காஞ்சி, இராமேசுவரம் முதலிய கோயில்களின் கல்வெட்டுக் களால் இவ்வுண்மை அறியலாம். கோயிலுக்கு வரும் நன்கொடை களைப்பெறவும், கோயிற் பண் டாரத்திலிருந்து பொருள்களைக் குறைந்த வட்டிக்குக் கடன் தரவும், தொடர்பான பாத்திரங் களைப் பாதுகாக்கவும், கோயில் தொடர்புடைய வேலைகள் பல வற்றைக் கவனிக்கவும், அமிர்த கணத்தார் என்னும் குழுவினர் இருந்தனர்.

## 13. தொழில் நிறுவனங்கள்

பொதுமக்கள் நலனுக்கு இன்றி யமையாத சிறந்த பல உதவி களைச் செய்வதில் கோயில்கள் முனைந்து நின்றன. இந்நாளைய "தொழில்தரும் நிறுவனங்கள்" போலக் கோயில்களிற் பண்டார கர்—கணக்கர்—பரிசாரகர்— திரு விதிக்கிடுவோர் — மாலைகட்டு வோர்—திருமுறை ஓதுவோர்— வண்ணம் இடுவோர்—சுண்ணம் தீற்றுவோர்—சோதிடர்— தச்சர் —தட்டார் — கன்னார்—குயவர்— நாவிதர்—வண்ணார். முதலிய தொழிலாளர்கள் பற்பலர் நிய மிக்கப்பெற்றிருந்தனர். இவர் களுக்குப்பரம்பரையாக வேலையும் மானியமும் அளிக்கப்பட்டன,

### பணி நிலையம்

கோயில்கள், படையெடுப்புகள் நிகழும்போதும், போர்கள் ஏற் படும் போதும், மக்களுக்குப் புகலிடம் அளிக்கும் அரண்களா கவும், வலிமை வாய்ந்த கோட் டைகளாகவும், படைவீடுகளா கவும் பயன்பட்டன. நாட்டில் பஞ்சம் முதலிய தீங்குகள் ஏற் படும்போது, தத்தம் பண்டாரத் திலிருந்து உணவளிப்பும், பொரு ளுதவிகளும் பிறவும் செய்யும் பணிநிலையங்களாகவும், கோயில் கள் திகழ்ந்து வந்தன.

இதுகாறும் கூறி வந்தவற்றால் நம் தமிழ்நாட்டிற்பழங்காலத்திற் கோயில்களே கல்விக் கூடங்களா கவும், ஆவணக் களரிகளாகவும், அறம் கூறும் மன்றங்களாகவும், மக்களுக்குத் தொழில் தரும் நிறு வனங்களாகவும், இன்ன பிறவா கவும், விளங்கி வந்தமை உணர லாம்.

## 14. தத்துவ நுட்பங்கள்

கோயில்கள் என்பது வெறும் கட்டிடங்கள் அல்ல. கோயில் களின் அமைப்பு முறைகள், எத்தனையோ பல தத்துவ நுட்பங் களையும், யோகஞான அனுபவச் செய்திகளையும் உட்கொண்டன வாகத் திகழ்கின்றன. பண்டைய நம் தமிழ்ச் சான்றோர்களாகிய திருமூலர் போன்ற தவஞான யோகச் செல்வர்கள்,

''உள்ளம் பெருங்கோயில்
ஊன்உடம்பு ஆலயம்
வள்ளற் பிரானர்க்கு வாய்
கோபுர வாசல்

தெள்ளத் தெளிந்தார்க்குச்
சிவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா
மணி விளக்கே''

என்பன போன்ற பாடல்களி ஞல், கோயில் அமைப்பு முறை களின உட்கிடையாக உள்ள தத்துவ நுட்பங்கள் பலவற்றை விளக்கியுள்ளன.

நம் தமிழ்ச் சான்ருேர்கள், யோகஞான நுண்ணுணர்வால் தமது உடம்பை ஒரு கோயி லாகக் கண்டுவந்தனர். நம் உடம் பின்கண் முதன்மையான ஆறு இடங்கள் உள்ளன எனவும், அவை மூலம், கொப்புழம், மேல் வயிறு. நெஞ்சம், மிடறு, புருவ நடு என்னும் ஆறும் ஆதம் எனவும் கண்டறிந்தனர். யோக நூல்கள் இவற்றை மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களாகக் கூறும். மூலாதாரம் எருவாய் கருவாய்க்கு இடையே நிலத்தின் தன்மையும், கொப்பூழ் நீரின் த்ன் மையும், மேல்வயிறு நெருப்பின் தன்மையும், நெஞ்சம் காற்றின் தன்மையும், மிடறு விசும்பின தன்மையும் உடையதாக விளங்கும். புருவவடு என்பது இடை, பிங்கலை சுழுமுனே நாடிகள் கலக்கும் இடமாகத் திகழும். இவ்விடங்களில் இறை வனின் அருள் விளக்கத்தைக் கண்டு தொழுது வழிபட்ட நம் தமிழ்ச் சான்ருேர்கள், தாம் அகத்தே கண்டறிந்த இறையருள் நிலையினை, ஏனைய எளிய பொது மக்களும் உணர்ந்து பெறுதற் பொருட்டு, அவ்வியல் பிறழாமல் புறத்தேயும் ஆறு இடங்களில் பொருத்தமுற ஆறு பெருந் திருக் கோயில்களாக அமைத்து வைத் துள்ளனர்.

நிலத்தின் தன்மையுடைய மூலாதாரத் தலமாகப் புற்றிடம் கொண்ட பெருமான் எழுந்தருளி வீற்றிருக்கின்ற திருவாரூரையும் — காஞ்சிபுரத்தையும் -, நீரின் தன்மையுடைய கொப்பூழ் ஆக நீர் ஊறும் தலமாகிய திருவானைக் காவையும், உணவைச் செறிப் பிக்கும் நெருப்பின் தன்மை யுடைய மேல்வயிருக நெருப் பியற் பாறைகள் மிகுந்த திரு வண்ணமலையையும், மூச்சுவளி இயக்கும் நெஞ்சமாக இறைவன் திருநடம்புரியும் தில்லைச் சிற்றம் பலத்தையும், விசும்பின் தன்மை நிலைபெறுமிடத்தின கண் திருக் காளத்தியையும், இடை பிங்கலை சுழுமுனை என்னும் மூன்றுநாடிகள் கூடும் புருவ நடுவாக, யமுனை கங்கை சரசுவதி என்னும் மூன்று ஆறுகள் கூடுகின்ற காசியையும, இவற்றிற்கு மேற்பட்ட பிரமந் திரம எனனும் தலை உச்சியாகத் திருக்கயிலையினையும், சிறந்த முறையிற் பலவகைகளில் பொருந்துமாது உருவகம் செய்து

நம் சான்ரோர்கள் கோயில்கள் அமைத்துள்ள நுட்பம் அறிந்து மகிழ்தற்குரியது.

தமிழகத்தின் திருக்கோயில்கள் பற்றிய இன்னேரனைய நுட்பச் செய்திகள் மிகப்பல.

குறிகளும் அடையாளமும் கோயிலும்
நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியிலர்மனம் என்கொல் புகாததே.

—திருநாவுக்கரசர்.

முடிவுரை:

இத்தகைய சிறப்பு மிக்க கோயில்களே, நம்முடைய நலங் கருதி நமக்காக நம் முன்னேர்கள் அமைத்துவைத்து அளித்துச் சென்ற அரும் பெரும் கலைச் செல்வங்களாகும்.

''சேலேறிய வயல் தென்காசி ஆலயம், தெய்வச் செயலாலே அமைந்தது; இங்கு என் செயல் அல்ல அதனை இன்னும் மேலே விரிவு செய்தே புரப்பார் அடிவீழ்ந்து, அவர்தம் பால் ஏவல் செய்து பணிவேன் பராக்ரம பாண்டியனே''.

எனத் தென்காசிக் கோயிலைக் கட்டிய பராக்கிரம பாண்டியன் (கி. பி. 1422-1463), பாடிய உருக்கம் மிக்க கல்வெட்டுச் செய்யுள் போன்றவை, நாம் நம் கோயில்களைத் தம் பண்டைப் பெருமையில் சிறிதும் குன்றாமல், போற்றிக் காத்து வளர்த்து வர வேண்டிய பொறுப்பையும் கடமையையும் உணர்த்துவன வாகும்.







# நெஞ்சு விடுதூது

தெளிவுரை:

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

காமக்[1] குரோதலோப மோகமதம் காய்ந்துஅடர்த்துச்
சாம்அத் தொழிலின் தலைமிதித்து- நாமத்தால்
கத்தும் சமயக் கணக்கின்விறற் கட்டுஅறுத்துத்
தத்தம் பயம்கொலைகள் ஆங்கழித்தே - தத்திவரும்
பாசக் குழாத்தைப் பட அடித்துப் பாவையர்தம்
ஆசைக் கருத்தை அறவீசி - நேசத்தால்
ஆனவே கம்கொண்டு அருள்மும் மதத்தினால்
ஊனையார் தத்துவங்களுள் புகுந்து - தேனைப்
பருகிக் களித்துஉயர்ந்து பன்மறை நாற்கோட்டால்
மருவித் திகழ் ஞான ஆனையான்

(தெ-ரை) ஞான நூல்களில் சொல்லப்படுகின்ற கீழுலகம், நடு உலகம், மேலுலகம் ஆகிய அனைத்துலகங்களிலும் இடையீடு இன்றி நிறைந்தும், அவற்றிற்கு ஆதாரமாகியும், சுத்தமாயையாம் உலகில் நிறைந்ததாயும், சுட்டிக் கூறுதற்கு அரிதாயும், அருளால் உணர்வார்க்கு எளிதாயும், நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள் ஆகியவற்றையே தனது வடிவாகவும் அவற்றை அறிதற்குரிய உயிர்களையே உயிராகவும் அவை உணர்தற்குரிய உணர்வையே தனக்குரிய உணர்வாகவும் கொண்டு மிகப்பெரும் வடிவினதாய், யாண்டும் பரந்திருப்பதாயும் கொடுந் துயர் விளைப்பதாயும் உள்ள பாசத்தை முற்றத் தொலைத்துக், கொடிய பிறவிப் பெருங்கடலைத் துகள் எழுமாறு வற்றச் செய்து, எதனையும் ஐயுற்றுத்தெளிதற்கேதுவான பொருட்பற்றும், சினமும், இவறுதலும், விடாப் பற்றும், செருக்கும் ஆகியவற்றைச் சினந்து அழித்து, இறத்தலை அறிவுறுத்தி வரும் நரை, திரை, பிணி, மூப்பு முதலாய விளைவுகளைத் தோன்றாதவாறு அழித்து, வெவ்வேறு பெயர்கள் கொண்டு தத்தம் நெறியே பொருந்திய நெறி எனக்கூறும் சமயக் கொள்கைகளாகிய கட்டுப்பாடுகளை அழித்து அச்சமுறுதல், உயிர்க்கொலை செய்தல் முதலாகத் தத்தமக்கு ஏற்றவாற்றான் வரும் தீக்குணங்களை அழித்து, உலகியல் தொடர்பின் வழி மீதூர்ந்து வரும்

---

1. காமக் குரோதமதமாச் சரியம்-என்பதும் பாடம்.

பற்றுக்கட்டினை அழியுமாறு செய்து, மகளிர் வழிப்பட்டு வரும் ஆசையை முழுமையாகக் களைந்து, உயிர்கள் ஈடேற வேண்டும் என்னும் நினைவையே விரைவாகக்கொண்டு, அருட் சத்தியாக விளங்கும் உமை, திரு, வாணி ஆகிய மூன்று சக்திகளையே மும்மதமாகக் கொண்டு, உடம்பாகப் பொருந்திய தத்துவக் காட்டினுள் புகுந்து, ஆனந்தமாகிய தேனைப் பருகி மகிழ்ந்து, பெருமிதமுற்று, சொல்லப்படுகின்ற நான்கு வேதங் களாகிய கொம்புகளுடன் பொருந்தி விளங்குகின்ற ஞானமாகிய யானை யைஉடையான்.

சொல்: ஆகுபெயராய் ஞான நூல்களையுணர்த்திற்று. ஆறு [1]அங்கம்–வேதப்பொருளையறிதற்குரிய கருவிகளாய ஆறு உறுப்புக்கள்: அவை நிருத்தம், வியாகரணம், கற்பம், கணிதம், பிரமம், சந்தம் என்பன. நிருத்தம்-வைதிகச் சொல்லை ஆராய்வது.வியாகரணம்-உலகியற் சொல்லையும் வைதிகச் சொல்லையும் ஒருங்கு ஆராய்வது: ஐந்திரம் முதலியன கற்பம்-போதாயனீயம், ஆபத்தம்பம், ஆத்திரேயம் முதலியன. கணிதம்–நாராயணீயம், வாராகம் முதலியன. பிரமம்-எழுத்தாராய்ச்சி சந்தம்-செய்யுள் இலக்கணம். துய்ய-நன்றாக. துய்யதுகள் எனக் கூட்டுக. பிறவிக்கடலை வற்றச் செய்வதுடன் நன்றாக அதன் ஈரமும் போம்படித்துகள் எழுப்பி என்றபடி. பொருட்பற்று முதலியன வற்றைக்கொள்வதற்குக் காரணம் அவையே தம்மை ஈடேற்றி விடலாகுமோ என ஐயம் கொள்ளுதலாலேயாம். ஆதலின் 'ஐயமுறு காமம்' என்றார். அன்றிக்காட்சி ஐயம் தெளிதல் குறிப்பறிதல் ஆகியன சிற்றின்பநுகர்வுக்குஏதுவாக இருத்தல் பற்றி 'ஐயமுறும் காமம்' என்றார் எனினும் அமையும். இவ்வாறு கொள்ளின் காமம் என்பது சிற்றின்ப நுகர்வு எனப் பொருள்படும். காண்டலின்றி ஐயம் நிகழாது ஆதலின் 'ஐய முறும் காமம்' என ஐயத்தை முதன்மையாகக்கூறினர், அணங்கு கொல் ஆய்மயில் கொல்லோ எனத்திருவள்ளுவனாரும் ஐயத்தை முன் வைத்துக் கூறல் காண்க. குரோதம்-சினம்; லோபம்-இவறன்மை; பொருளைச் செலவழிக் வேண்டும் இடத்தும் செலவழிக்காது அதனை இறுகப்பற்றி நிற்பது.மோகம்-விடாத பற்று.மதம்–செருக்கு. சாம் அத்தொழிலின்–இறத்தலை அறிவுறுத்தி அதற்கு முன்னோடியாக வரும் விளைவுகள்: அவை நரை திரை பிணி மூப்பு முதலியன. தலைமிதித்து-தலைகாட்டாதவாறு அழித்து 'பசும்புல் தலைகாண்ப தரிது' என்பதை நினைவு கூருக. நாமம்-பெயர். சமயக்கணக்கர்கள் தத்தம் கொள்கைகளுக்கு ஒவ்வொரு பெயர் இட்டு அழைத்துக் கொள்வர்: அதுவே சமயப்பெயர்களாயின. அவை ஒன்று உரைத்தது ஒன்று உரையாமையின் 'கத்தும் சமயக் கணக்கு என்றார்.

1. தொல் – பொருள் - புறத்திணை-20; நச் - உரை.

அச்சமயங்கள் ஒவ்வொன்றும் தாம்தாம் வென்றனவாகக் கூறுதலின் 'விறற்கட்டு' என்றார். விறற்கட்டு-வென்றதாகக் கூறும் உரை. அச்சமுறுதலும் கொலை செய்தலும் ஒவ்வொருவரிடத்தும்நிகழ் வனவல்ல. அவரவர்தம் வினைவழி ஏற்படுவன. ஆதலின் 'தத்தம் பயம் கொலைகள்' என்றார். பற்றுக்கள் காலப் போக்கில் சிறிது சிறிதாகவும் தொடர்ந்தும் வருவன. ஆதலின் 'தத்திவரும்' என்றார். 'அருளது சத்தி யாகும் அரன்தனக்கு' என்னும் சிவஞான சித்தியார். எனவே இறை வனின் அருளே உமை திரு வாணி ஆகும். ஆதலின் 'அருள் மும் மதத் தினல்' என்றார். ஊனை ஆர்-உடம்பாகப் பொருந்திய. பன்மறை-பாராட்டிக் கூறப்படுகின்ற வேதங்கள். 'வாயாரப் பன்னி ஆதரித்து' என வரும் திருவாக்கும் காண்க.

—இருமுச்
சமையம் கடந்து தனக்குவப் பிலாது
சுமை துன்ப நீக்கும் துவசன்

(தெ-ரை) அறுவகைச் சமயங்களையும் கடந்து தன்னிகரில்லாத் தலைமையால் உயிர்க்குற்ற துன்பங்களை நீக்குதலையே தமக்குரிய கொடி யாக உடையான்.

அறுவகைச் சமயங்களாவன: வாமம் வைரவம் மகாவிரதம் காளாமுகம் பாசுபதம் சைவம் என்பன. இவை அகச்சமயம் எனப் படும். அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய் விளங் கினும் அந்நிலையனைத்தையும் கடந்து நிற்பவன் என்பார் 'இருமுச் சமயம் கடந்து' என்றார். இறைவனின் கொடி ஏறு என்ப. அதுவும் அறத்தின் வடிவு என்பர். எனவே உயிர்க்குற்ற துன்பங்களை நீக்கு தலாகிய பேரறத்தையே கொடியாக உடையவன் என்பது விளங்கும். 'சிறந்த சீர்கெழு கொடியும் அவ்வேறு என்ப', 'வெள்ளேறு வலவயின் உயரிய பலர் புகழ் திணிதோள் உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கட் செல்வன்' என வருவன நினைவு கூர்தற்குரியன. துவசம் – கொடி.

—சுமையொன்றித்
தம்மை மறந்து தழல்ஒளியுள் ளேயிருத்தி
இம்மை மறுமை இரண்டுஅகற்றிச்—செம்மையே
வாயுவை ஓடா வகைநிறுத்தி வானத்து
வாயுவையும் அங்கே யுறஅமைத்துத்—தேயுவால்
என்றும் ஒருதகைமை யாயிருக்கும் இன்பருளே
நின்று முழங்கும் நெடுமுரசோன்

(தெ-ரை) புலன்வழிச் செல்லும் பொறிகளை அடக்கித் தம்மை மறந்து மூலாதாரத்திலிருந்து எழும் அனல் ஒளியை உள்ளே இருத்தி இத்தகையயோக முறையால் மேல்வரும் இம்மைத் துன்பமும் அதன்பின் வரும் மறுமைத் துன்பமும் ஆகிய இரண்டையும் அகற்றி உள்ளிருக்கும் காற்றை வெளியே விடாமலும், வெளியிலிருக்கும் காற்றை உள்ளே விடாமலும் யோக நிலையில் நின்று மூலாதாரத்து மூண்டெழும் கனல் வழிப்பெறும் அமுத நுகர்வால் அசைவற்ற நிலையில் இறையருளோடு ஒன்றுபட்டிருக்கும் இனிய அன்பர்தம் இதயத்தே நின்று முழங்கும்படியான நெடிய முரசினை உடையோன்.

கமையொன்றி-புலனடக்கத்தால் ஒன்றுபட்டு. தழல் - நெருப்பு: மூலாதாரத்து இருக்கும் நெருப்பு. உள்ளிழுத்த காற்று வெளிச் செல்லாமலும் வெளியிருக்கும் காற்று உட்புகாமலும் இருக்கும் நிலை யோக நெறியில் கைவரப் பெற்றார்க்கே அமையும். 'உயிராவணம் இருந்து' என அப்பரடிகள் அருளுவதும் காண்க தேயுவால்-நெருப்பால்; 'மூலாதாரத்து மூண்டெழும் கனலைக் காலால் எழுப்பும் கருத்தறிவித்து' என வரும் திருவாக்கும் காண்க, இன்பர் உளே- இன்புற்றிருக்கும் அடியவர் உள்ளத்தே.

— அன்றியும்
மாலும் அயனும் வகுத்தளித்த வையமெலாம்
சாலும்அதற்; கப்பாலும் எப்பாலும்—மேலை
உலகும் உலகால் உணரவொண்ணு ஊரும்
இலகி நடக்கும் எழில் ஆணையான்.

(தெ-ரை) இவையன்றியும் அயனுல் படைக்கப்பட்டு மாலால் காக்கப் பெறும் எல்லா உலகத்தும், பொருந்திய அவ்வுலகத்திற்கு அப்பாலும் வேறு பிறவிடத்தும் இவையன்றி ஆங்காங்கு நிலவும் உலகங்களிடத்தும் உயிரினங்களால் உணர இயலாத ஊரிடத்தும் விளங்கி நடத்தும் அழகு மிக்க ஆணையை உடையான்.

மாலும் அயனும் வகுத்தளித்த வையம் என்பது பிரகிருதி மாயையிலுள்ள உலகமாகும். அதற்கு அப்பாலும் என்றது அசுத்த மாயையிலுள்ள உலகமாகும். மேலை உலகம் என்பது சுத்தமாயையில் உள்ள உலகமாகும். உலகால் உணரவொண்ணு ஊர் என்றது அருள் வெளியாகும். அவ்வருள் வெளியில் இருந்தே இறைவன் தனது ஆணையைச் செலுத்துகின்றனன்.

குலபூடண பாண்டியன் இறைவன் செயலையறிந்து மகிழ்தல்

உடனே குலபூடண பாண்டியன் விழித்தெழுந்து ஐயுறவினின்றும் நீங்கி, அஞ்சி, வெயர்த்து, உடல் பூரித்துப் பல பாக்களினாலே சோமசுந்தரக் கடவுளைத் துதித்தான்; அன்புக்கெளிவந்த சிவபெருமானின் மாட்சிமையை நோக்கி நினைக்குந்தோறும் இடையறாது சுரந்து எழுகின்ற [1]அற்புத வெள்ளமும் [2]சிவானந்த வெள்ளமும் தன்னைக் கொள்ளை கொள்ளத் தன் அரண்மனையினின்று நீங்கிச் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலை யாவருக்கும் தெளிவித்து அவர்களையும் தன்னைப் போல் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கச் செய்தான்.

குலபூடண பாண்டியன் சிவபதம் அடைதல்

பின்பு, குலபூடண பாண்டியன் தன் மகன் இராசேந்திரபாண்டியனிடம் வெண் கொற்றக் குடையினையும் செங்கோலையும் அரசமுடியையும் அளித்துவிட்டுக் கொன்றை மாலை அணிந்த சிவபெருமானின் திருவடி மலரைத் தனது முடியில் அணிந்து விண்ணுலகை ஆளும் அரசுரிமையைப் பெற்றனன்.

செய்யுள்- *30*
ஆகச் செய்யுள்- *1818*

---

## 35. தண்ணீர்ப் பந்தல் வைத்த படலம்

சோழன் தன் மகளை வழுதிக்குக் கொடுக்க விரும்புதல்

இராசேந்திர பாண்டியன் செங்கோல் செலுத்தும் நாளிலே, காடு வெட்டிய சோழன் சோமசுந்தரக் கடவுளை யாவருமறிய வெளிப்படையாக வந்து வந்து தரிசனஞ் செய்து கொண்டு போகக் கருதி இராசேந்திர பாண்டியனுடைய நட்பினைப் பெறற் பொருட்டு அவ

---

1. அற்புத வெள்ளம்- இங்குச் சிவஞானப் பெருக்கம் ஆகும்.
2. சிவானந்த வெள்ளம் - இங்குச் சிவபோகப் பெருக்கம் ஆகும்.

[illegible] செயாகிய கையுறையை அனுப்பினன் இராசேந்திர பா[illegible]யன் கா[illegible] சோழமன்னன் அனுப்பிய பொன்னு பரணம், பொலகுடை முதலாகவுள்ள பிற பொருள்களையும் ஏற்றுக் கொண்டு, தானும் சோழனுடன் மனம் ஒன்றுபடும் நட்பினைப் பெறக் கருதி வேறு கையுறை அனுப்பி நட்புப் பூண்டான். காடு வெட்டிய சோழன் மகிழ்ச்சியுற்றுத் தன் மகளை இராசேந்திர பாண்டி யனுக்கு மணம் செய்து கொடுக்க உடன் பட்டான்.

### சோழன் தன் மகளை அரச சிங்கனுக்கு மணஞ் செய்தளித்தல்

இராசேந்திர பாண்டியனுக்குச் சோழன் தன் மகளைக் கொடுக்க உறுதி செய்த செய்தியினை இராசேந்திரனுடைய தம்பியும் பழிக்கு அஞ்சாதவனுமாகிய அரச சிங்கன் (இராச சிங்கன், இராச சிம்மன்) என்பவன் கேள்வியுற்றான். தன் தமையனுக்குப் பேசப்பட்ட சோழ னுடைய மகளைத் தானே மணந்துகொள்ளக் கருதித் தமையனை வஞ்சித்துக் காஞ்சி நகரை அடைந்தான் அது கேட்ட சோழன் கடல் போன்ற சேனைகள் சூழ அரசசிங்கனை எதிர்கொண்டு அழைத்துச் சென்று இராசேந்திர பாண்டியனுக்கு என்று வரையறுத் திருந்த தன் மகளைத் திருமணம் புரிவித்தான்.

### சோழன் தன் மருகனோடு பாண்டியன் மீது படையெடுத்தல்

பிறகு, காடு வெட்டிய சோழன் பாண்டிநாட்டு அரசுரிமை தன் மருமகனாகிய அரசசிங்கனுக்குக் கிடைத்தலை விரும்பி, இராசேந்திர பாண்டியனைப் பிடிக்ககருதினான்; உடனே மருமகனாகிய அரசசிங்கனோடு எண்ணிலாத சேனைகள் சூழ இராசேந்திர பாண்டியன் மேல் போர் குறித்து முரசு அறைவித்துப் புறப்பட்டுச் சென்று மதுரைக்கு இரண்டு யோசனை தூரத்தில் தங்கிப் பாடி வீடு அமைத் தான்.

### இறைவன் வருந்திய பாண்டியனுக்கு அருள்புரிதல்

காடு வெட்டிய சோழமன்னன் அரசசிங்கனோடு படை எடுத்து வந்திருப்பதை ஒற்றர்கள் மூலம் இராசேந்திர பாண்டியன் அறிந் தான்; திருக்கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளின் திருவடி களை வணங்கி நின்று, ''எம்பெருமானே! நள்ளிரவிலே தனியனாய் வந்து உமது திருவடியைப் பணிந்து சென்ற உமது பத்தனாகிய காடு வெட்டிய சோழன், பின்பு தமியேனுக்குப் பல வரிசைகள்

விடுத்துக் கலந்த நட்பினைப் பெற விரும்பியவன்; இப்பொழுது தமியேனுக்கு விரோதமாகப் படை எடுத்து வந்துள்ளான். அறத்தினை விடுத்த அசுரர்களின் முப்புரங்களையும் நீறுபடுத்திய புண்ணியனே! அன்று அவனுடைய அறச்செயலுக்குத் துணையாகிநின்ற நீர் இன்று அவன் செய்யும் மறச் செயலுக்கும் துணையாகிநின்று அருள் வீரோ!'' என்று குறையிரந்து வேண்டினான். அப்பொழுது சோமசுந்தரக் கடவுளின் திருவருளால், ''பாண்டியனே! நீ நாளைக்கு உன் சேனையோடு போர்க்களத்திற்குச் சென்று உன் பகைவனோடு எதிர்த்துப் போரிடுக; வெற்றி உன்னுடையதாகச் செய்வோம்'' என்று வானில் ஓரசரீரிவாக்கு எழுந்தது. அவ்வாறொலியினைக் கேட்ட இராசேந்திர பாண்டியன் மகிழ்ச்சிக் கடலிலே மூழ்கியவனாய்ச் சோமசுந்தரக்கடவுளைப் பன்முறை வணங்கி விடை பெற்றுக் கொண்டு அங்கு நின்றும் நீங்கித் தன்னிருக்கையை அடைந்து இரவு விடியும் எல்லையை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான்.

பாண்டியன் சோழனோடு போருக்கெழுதல்

நீண்ட இரவு கழிய வானம் வெளுக்கு முன்னரே இராசேந்திர பாண்டியன் துயில் நீங்கி எழுந்தான்; சந்திமுதலிய நித்தியகடன்களையும், சிவபூசைகளையும் முடித்துக் கொண்டு எழுந்து தன் சேனைகள் சூழப் புறப்பட்டுப் போர்க்களத்தை அடைந்தான். அலைமோதும் கடலின் மேல் ஒரு ஆறு சென்று பாயுமாறு போலச் சோழனது பெரும் படை வீரராகிய கடலின் மேல் பாண்டியனது சிறு சேனை சென்று வருத்தி நின்றது.

சோழன் படையும் பாண்டியன் படையும் கலந்து போரிடுதல்

இடி போன்ற குரலினை உடையவரும், காற்றைப்போல் கடிது செல்லும் செலவினையுடையவரும் தீப்போன்ற சினமுடையவரும், வீர நகையினை உடையவரும், போரில் மானமாகிய அணியினையுடையவரும், சீற்றங் கொண்டு மடித்த வாயினையுடையவருமாகிய இரு திறத்துப் படைவீரரும் எதிர்த்துக் கை கலந்து போர்புரியத் தொடங்கினர். சோழனுடைய சேனைகட்கெல்லாம் பாண்டியனுடைய சேனைகள் சோமசுந்தரக்கடவுளின் திருவருளால் ஒன்று அனந்தமாக உருக்கொண்டு வந்து தோன்றின. தேர் செல்லும் ஒலியும், குதிரைகள் கனைக்கும் ஒலியும், யானைகளின் பிளிறொலியும், பெரிய வாத்தியங்கள் ஒலிக்கும் ஒலியும், வீரர்கள் புரியும் போரின் ஒலியும், அவர்கள் தோளினைத் தட்டும் ஒலியும் ஒன்றுபட்டுக் கடல்

ஒலியுடன் கலந்தன. வில்வீரர்களோடு வில்வீரர்களும், வாள்வீரர்களோடு வாள்வீரர்களும், வேல்வீரர்களோடு வேல்வீரர்களும், மல்லர்களொடு மல்லர்களும், யானை வீரர்களோடு யானை வீரர்களும், குதிரை வீரர்களோடு குதிரை வீரர்களும், தேர் வீரர்களோடு தேர் வீரர்களும் தீயுங் காற்றுங்கூடி எதிர்த்துப் பொருதாற் போலப் போரிட்டனர். சோழனுடைய வீரர்கள் பாண்டியனுடைய படை வீரர்கள் செலுத்தும் கணைகளை எதிர்த்து நின்று தடுப்பர்; கொடிய கணைகளைத் தாம் விடுத்துப் பின்பு அவர்கள் தொடுக்கும் அம்புகளை வில்லோடு துண்டு படுத்துவர்; அதன் பின், அவர்கள் அளவின்றிச் செலுத்தும் அம்புகள் தம் மார்பில் தைக்க அவற்றைப் பிடுங்கிப் பகைவர் மேல் எய்து கொல்லுவர்; [1]பாண்டியனுடைய படைவீரர்கள் சோழனுடைய படைவீரர்களின் மேல் மழைபோலக் கணைகளைப் பொழிந்து களித்து நின்று துள்ளுவர்; பகைவர் சொரிந்த அம்புகளுக்கு எதிர் தப்பி ஒதுங்கி நின்று, அவர்களின் அம்பும் வில்லும் முறியுமாறு கணைகளைத் தொடுத்து வீரமுழக்கஞ் செய்வர். படைவீரர்களின் கால்கள் முறிந்தன; அறுபட்ட தலைகள் நிலத்தில் உருண்டன; மலை போல் திரண்ட தோள்கள் துண்டாகிச் சரிந்தன; தேர்கள் அழிந்தன, போர்க் கருவிகள் முறிந்தன; யானைகள் துதிக்கை அறுந்து அலறி வீழ்ந்தன; இரத்த வெள்ளம் ஓடியது; கழுகுகளும், பூதங்களும், பேய்களும் போர்க்களமெங்கும் நெருங்கின. இவ்வாறு இரு மன்னர்களின் படைவீரர்களும் உடம்பின் நிழல் அடியில் ஒடுங்குமாறு வான் உச்சியில் சூரியன் வருமளவும் இடை விடாது போர் செய்தனர்.

வேனிலின் கொடுமை

இறுதிக் காலத்தில் எல்லாவற்றையும் அழிக்குமாறு நின்ற உருத்திர மூர்த்தியின் நெற்றிக் கண்ணினின்று சிந்திய தீயைப் போலச் சூரியன் கொதித்து நின்று எரித்தலால், எல்லா ஆறுகளிலும் நீர் வறண்டது; இந் நிலவுலகமே அல்லாமல் வானுலகும் கருகி ஆகாய கங்கையும் வற்ற வேனிற் காலம் வந்தது. சூரியனுடைய வெய்ய கிரணங்கள் நிலவுலகத்தைப் பிளந்து சென்று பாதலத்தையும், மலைகளையும் பிளந்தன; சோலைகளின் இலைகள் கருகி விழுமாறு செய்தன; யாவரையும் கண்கூசுமாறு கானல் எங்கும் வீசிற்று. கானல் நீரும் வேர்வை நீரும் தவிர வேறு நல்ல நீர்கள் சிறிதும் இன்றி வற்றின.

---

1. இதனைத் தொல்காப்பியர் 'நூழிலாட்டு' என்பர்.

சேனை வீரர் முதலியோர் வேனில் வெப்பத்தால் வருந்துதல்

தீயவரோடு சேர்ந்த நல்லவரும் தீயவர் ஆவார்; ஆதலால், வெப்பு நிலத்தில் படிந்து வரும் காற்றும், திங்களின் ஒளியும் சுடா நின்றன. கொடிய வெம்மைக்கு ஆற்ருத யானைகள் மதநீர் சுரத்தல் மாறிச் சீற்றமும் செருக்கும் ஒழிந்து வாடிச் சோர்ந்தன; ஊழிக் காற்றைப் போல் விரைந்து ஓடும் குதிரைகள் தென்றலைப் போலத் தளர்ந்த நடையினைக் கொண்டன. சூறைக் காற்று என்னும் பாகனுல் செலுத்தப் பட்ட கானலாகிய தேரின்மேல் வேனிற் காலமென்னும் அரசன் ஏறிச் சினந்து வெப்பமாகிய படைக்கலங்களை வீச இரண்டு மன்னர்களின் சேனைகளும் அவ் வெம்மைக்குத் தோற்று நீர் வேட்கை வருத்த வாடின. சிறிதும் இரக்கமில்லாத செல்வரிடம் சென்று இரப்பவரைப் போலச் சிலர் வெப்பத்தை அள்ளி வீசுகின்ற கள்ளி மரத்தின் நிழலில் சென்று ஒதுங்கினர்; மிக வறுமை அடைந்தோர் தம்மிலும் மிகுந்த வறுமையையுடையாரிடம் சென்று இரத்தல் போலச் சிலர் இலைகள் கருகி உதிர்ந்த மரத்தின் நிழலின் கீழே சென்று ஒதுங்கினர்; யானை, குதிரை, தேர் இவற்றின் சிறு நிழலில் சிலர் ஒதுங்கினர்; கேடயத்துள்ளும் வெள்ளிய குடையினுள்ளும் சென்று சிலர் ஒதுங்கினர்; வீர சுவர்க்கஞ் சென்ற வீரர்களின் பெயர் குறித்து நின்ற கற்களின் நிழலின் கீழே சிலர் ஒதுங்கினர்.

சோமசுந்தரக் கடவுள் தண்ணீர்ப் பந்தல் வைத்தல்

இவ்வாறு வெப்பத்தால் வருந்துஞ் சமயத்தில் அளவிறந்த உயிர்களனைத்திற்கும் ஈன்ற தாயைப்போல் விளங்கும் பெருங்கருணையாளரும் தராசுக்கோல்போல் நடுநிலைமை தாங்கியவரும், கூடற்பெருமானுமாகிய சோமசுந்தரக் கடவுள் இராசேந்திர சோழனின் படையின் நடுவுள், நான்கு வேதங்களும் நான்கு கால்களாகப் பொருந்தியதொரு தண்ணீர்ப் பந்தல் வைத்து அதன் கீழே நெற்றியில் அணிந்த திரிபுண்டரமும், காதின்மீது அணிந்த மலரும், திருவடியிலே தரித்த ஒற்றைக் கிண்கிணியின் ஒலியும் இடுப்பில் கச்சினுல் இருகக்கட்டப்பட்ட புலித்தோலாடையும், கண்டோர் மனத்தைக் கவரும் திருப்புன்முறுவலும், திருவுள்ளத்திலெழுந்த அருட்குறிப்பும் புலப்பட, வேதத்தில் கூறப்படும் தவக்கோலம் உடையவராய் எழுந்தருளியிருந்து சடையில் அணிந்த வற்ருத கங்கை நீரை நிரப்பிய ஒரு கெண்டியை ஏந்தி ஒருவருக்கு ஒன்றேயாம் இலட்சம்

பேருக்கு இலட்சமாய் உள்ள துவாரத்தினுலே தண்ணீர் வார்த்துத் தாகத்தைத் தணித்தருளினுர்.[1]

இராசேந்திர பாண்டியன் வெற்றிபெறுதல்

பாண்டியனுடைய படைவீரர்கள் சிவபெருமான் வைத்தருளிய மணம் மிகுந்த மலரால் மணம் ஊட்டிய தண்ணீர்ப்பந்தலை அடைந்து தண்ணீர் குடித்து இளைப்பு நீங்கினர்; மீண்டும் வலிமை பெற்றுச் சோழன்மேல் போருக்குச் சினந்தெழுந்து அளவிறந்த அவன் படைகள் சிதறும்படி தும்பை மாலை அணிந்து போரினைப் புரிந்தனர். சோர்வடைந்திருந்த சோழன் படை கலங்கிக் கடலுடைந்தாற்போலப் புறங்கொடுத்து ஓடியது. அப்போது இராசேந்திர பாண்டியன் வாகை மாலை சூடினுன். படைவீரர்கள் காடு வெட்டிய சோழனை அவன் மருகனுகிய அரசசிங்க பாண்டியனேடு பிடித்து வந்து இராசேந்திர பாண்டியன் முன் நிறுத்தினர்.

பாண்டியன் சோழன் முதலியோரை விடுவித்து அரசாளுதல்

இராசேந்திர பாண்டியன், தன்னிடம் கொண்டு வரப்பட்ட சோழனையும் தன் குலத்திற்கு [1]வடு உண்டாகும்படி செய்த தம்பியையும் சோமசுந்தரக் கடவுள் திருமுன் கொண்டுபோய் விடுத்து, ''எம் பெருமானே! உமது திருவுளம் யாது?'' என்று வணங்கி நின்ருன். அப்போது ஆகாயத்தினின்றும் இறைவன் திருவருளால், ''பாண்டியனே! நீ அறநெறி பிழையாதவன் அல்லவா? உன் கருத்துக்கு இசைந்ததைச் செய்யக் கடவை'' என்று ஓரசரீரி வாக்கு எழுந்தது. பாண்டியன் அது கேட்டு அறநெறியால்,காடுவெட்டிய சோழனுக்குச்சிலயானைகளையும், குதிரைகளையும், அணிகலன்களையும், பிறவற்றையும் கொடுத்து அனுப்பிவிட்டான்; பின்பு தனது தம்பியாகிய அரசசிங்கனை, அவனது அஞ்சாமையும் ஆண்மைச் செருக்கும் நீங்க, அவன் அனுபவிக்கும் செல்வங்களுள்ளே சிலவற்றை மாற்றி அவனை வேருக ஒதுக்கிவைத்து விட்டு எல்லாவுயிர்களுக்கும் அன்னை போல இருந்து நிலவுலகில் பல வளங்களும் சிறக்க வாழ்ந்து வந்தனன்.

செய்யுள்—37
ஆகச் செய்யுள்—1855

---

1. இங்கு, ''தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து, நன்னீர்ச் சேவக ளுகிய நன்மையும்'' (திருவாசகம், கீர்த்தித் திருவகவல்) என வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

1. வடு-குற்றம்: அது தனக்கு மனைவியாகக் குறித்தவளை மணஞ் செய்ததும், தன் அரசை வெளவப் போருக்கு வந்ததும் ஆகும்.

# 56. இரசவாதஞ் செய்த படலம்

## திருப்பூவணத் தலத்தின் பெருமை

இராசேந்திரனின் பைந்தமிழ்ப் பாண்டி நாட்டிலே திருப்பூவணம் என்னும் பெயர் கொண்ட ஒரு சிவத்தலம் உள்ளது. அங்குச் சிவபெருமான், வையையாறு தன் அலைகளாகிய கைகளால் பக்கங்களிலுள்ள பூஞ்சோலையில் மலர்ந்த பல மலர்களையும் எடுத்துத்தூவி வணங்க எழுந்தருளியுள்ளார். அத்தலத்தில் அசையும் பொருள் அசையாப் பொருள் எல்லாம் சிவலிங்க வடிவம் என்று கருதிக் கோள்களும் விண்மீன்களும் சற்று விலகிச் செல்லும்; இந்திரன், சூரியன் முதலிய பல தேவர்கள் வந்து வழிபட்டுத் தாம் விரும்பிய வரங்களைப் பெற்றுள்ளனர். இத்தகைய திருப்பூவணத்தின் சிறப்புத்தான் என்னே!

## பொன்னனையாளின் தன்மை

கிளிகள் நிறைந்து வாழும் சோலை சூழ்ந்த திருப்பூவணப் பெருமானின் திருக்கோயிலிலே பணிபுரியும் [1]உருத்திர கணிகையர்களுள்ளே பொன்னனையாள் என்னும் பெண் ஒருத்தி இருந்தாள், அவள், உருத்திர கணிகையர்களின் தவப்பயன் போன்றவள்; வண்டு மிழற்றும் கூந்தலை உடைய தெய்வப்பெண்ணை ஒத்தவள்; தேவர்கட்கும் உள்ளத்தில் மயக்குகின்ற அமுதம் போன்றவள்; ஏழிசைகளையுடைய யாழின் வழியே பாடுவதினும், பரத நூல் முறைப்படி ஆடுவதிலும் மிக வல்லவள்; பெண்களுக்குரிய அழகின் தன்மையினும், பிறவற்றிலும் அரம்பை மகளிரை நிகர்த்தவள்; ஆயினும் சிவபுண்ணிய நெறியில் நடக்கும் ஒழுக்கத்தினுல் அவ்வரம்பை மகளிரினும் மேலானவள்,

இத்தகைய சிறப்புக்களுடன் விளங்கிய பொன்னனையாள் நாடோறும் தன் தோழியர்களுடன் வைகறையிலே எழுந்து தூய நீரிலே மூழ்கிச் சிவ பூசையை முடித்துக்கொண்டு திருக்கோயிலை அடைந்து திருப்பூவண நாதரை வணங்கிச் [1]சுத்த நிருத்தம் ஆடுவாள்; பிறகு

---

1. உருத்திரகணிகையர்-இவர்கள் முன்னொரு காலத்திலே தாருக வனத்தில் பிட்சாடன வடிவோடு சென்ற சிவபெருமான் அங்குள்ள இருடி பத்தினிகளை அனபோடு நோக்க, அவர்கள் கருப்பமுற்றுப்பெற்ற பெண்கள் ஆவர். இந்த உருத்திரகணிகையர் ஆலயத்து எழுவகை நடனமாதருள் முதலானவர்; தேவதாசியுமாம்.

1. சுத்த நிருத்தம்–சொக்க நடனம்; இது சாந்தமாக ஆடும் சாந்திக் கூத்தின் வகை நான்கனுள் ஒன்று; நூற்றெட்டுக் கரணமுடையது. இனி மத்தளம் முதலியன இன்றிச் செய்யப்படும் நிருத்தமுமாம்.

வீட்டிற்கு வந்து சிவனடியார்களைச் சிவனெனப் பாவித்து வரவேற்றுப் பணிந்து பூசித்து அவர்கள் மகிழுமாறு இனிய சுவையுடன் கூடிய திருவமுது செயவிப்பாள்; அதன் பிறகு அவர்கள் புசித்து எஞ்சியதையே புசிப்பாள்; அஃது அவளுடைய நியமமாகும்.

### சிவபெருமானின் திருவுருவத்தைச் சமைக்க எண்ணுதல்

இவ்வாறு பொன்னனையாள் ஒழுகும் நாளிலே அவளுடைய அன்பை உலகத்தாருக்கு அறிவிக்கும்பொருட்டுச் சிவபெருமான் தமது திருவுருவத்தை வார்ப்பிக்கவேண்டுமென்னும் ஆசையை அவள் மனத்தின்கண் கொடுத்தருளினர். பொன்னனையாள் சிவபெருமான் கொடுத்தருளிய அன்பே வடிவமாகமாறி மழுவையும் மானையும் திருக்கரத்தில் ஏந்திய சிவபெருமானது திருவுருவைக் [2]கருவினால் செய்வித்தாள்; நாடோறும் ஆடல் பாடல் முதலியவற்றால் வருகின்ற பொருள் முழுதையும் மெய்யன்பினால் அடியார் பூசையிலே செலவழித்தாள். கிடைக்கும் பொருள் யாவும் அடியார் வழிபாட்டிற்கே அல்லாமல் சிறிதும் மிஞ்சாமையினால் சிவபெருமானின் திருவுரு வார்ப்பிப்பது எங்ஙனம் என்று கருதி வருத்தமுற்றாள். குலபூடண பாண்டியனுக்கு எடுக்க எடுக்கக் குறையாத பொற்கிழியினை அருளிய சோமசுந்தரக் கடவுளை மனத்திலே சிந்தித்திருந்தாள். சிவபெருமான் அவள் நினைவைத் தம் திருவுளத்தில் கொண்டருளினர்.

### சிவபெருமான் சித்தர் வடிவங்கொண்டு வருதல்

ஒரு நாள் சிவபெருமான், தூய திருநீறு அணிந்த திருமேனியும், கட்டுவாங்கம் (மழு) பிடித்த திருக்கரமும், யோகபட்டிகை கட்டிய இடையும், கோவணமீது கட்டிய ஆடையும், விபூதிப்பையும், பவளம் போன்ற செஞ்சடையுமுடைய ஒரு சித்த மூர்த்தியின் வேடம் பூண்டு பொன்னனையாளின் வீட்டினை அடைந்து, அளவில்லாமல் வந்து அமுது செய்யும் அடியார்களோடும் கூடித் திருவமுது செய்யாமல் திருவுள்ளத்தில் ஏதோ ஒன்றைக் கருதியவராய்க் கடைவாயிலின் ஒருபக்கத்தே எழுந்தருளியிருந்தார். சிவனடியார்களெல்லாரும் திருவமுது செய்துகொண்டு திரும்பிச் சென்றனர். வேறாக இருந்த சித்தமூர்த்தியைப் பொன்னனையாளின் தாதியர் கண்டு வணங்கி, ''ஐயனே! திருவமுது செய்ய உள்ளே எழுந்தருளவேண்டும்'' என்று வேண்டினர்.

---

2. கரு—குழவியுருத் தோன்றும் தாயின் கருப்போன்று உலோகங்களினால் உரு வார்க்கப்படுதற்கு மெழுகினால் அமைக்கப்பெறும் வடிவம். இம் மெழுகு உரு அமைத்தலைக் 'கருக் கட்டுதல்' என்று கூறுவர்.